

# சிவாஜி



காலத்தையும், மனித சக்தியையும் அருமை யறிந்து பயனுடையதாகச் செய்வதில் திறமை பெற்ற அமெரிக்கர்கள் எல்லாத் துறைகளிலும் மக்களுக்கு அருமையான கல்வி கிடைக்கச் செய்கிறார்கள். வெளி நாடுகளிலிருந்து ஆண்டுதோறும் பல துறை மாணவர்களும் பயிற்சி பெற அமெரிக்கா செல்கிறார்கள். படத்தில் பீகார் மாணவரான டாக்டர் ரஸ்டம் ராய் எக்ஸ்ரே சம்பந்தமான நுணுக்கமான பயிற்சி பெறுகிறார்.

## கேட்டீர்களா கதையை!

## போட்டியிலிருந்து விலகப் போதுமாம் ஒரு வாரம்.

### விக்கிரமாதித்தன் சிங்காதனம்.

விசித்திரமான பண்புபடைத்த–சரித்திர–புராணப் பிரசித்தி பெற்ற–பழைய ஒரிஜினல் விக்கிரமாதித்தன் சிங்காதானத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்களே! நமது மாகாண மந்திரி சபை கிட்டத் தட்ட இந்த மந்திர சக்தியைப் பெற்று வருவதாக நமக்கு இப்போது திட்டமாகத் தெரிய வருகிறது.

ஆகஸ்ட் தியாகிகள், அஹிம்சா வாதிகள், தொழிலாளத் தோழர்கள், புனிதமான காந்தி பக்தர்கள், அகோரமான தபஸ்விகள், யாராயிருந்தாலும், அவர்கள் மந்திரிகளாகி விட்டால் அந்தப் பதவியின் மகிமையே அலாதிதான் போலிருக்கிறது.

தேர்தல்களில் சூழ்ச்சிகள், தந்திரங்கள், முன்னேற்பாடுகள் செய்வதில் அந்தக் காலத்து ஜஸ்டிஸ் கக்ஷி மந்திரிகள்தான் பலே சூரர்கள் என்று நாம் இது வரை கருதி வந்தோம். நமது சுதந்திர மந்திரிகள் சங்கதியும் சற்றேறக்குறைய அந்த திறமையில் பின்வாங்க வில்லை என்பது பளிச்சென்று தெரிய ஆரம்பித்திருக்கிறது.

முன்பு ஜஸ்டிஸ் மந்திரிகள் பதவியிலிருந்த கடைசி காலத்தில் ஸ்தலஸ்தாபனத் தேர்தல்களில் காங்கிரஸ் தலையிட ஆரம்பித்தது. உப்புசத்யாக்கிரஹம், போலீஸ் தடியடிப்பிரயோகம், பல வருடங்கள் சிறைவாசம் இவற்றில் மெருகு ஏறிப்போயிருந்த காங்கிரஸ் வாதிகள் தேர்தலில் பொது மக்களின் அன்பைக் கவர்ந்த வேகத்தைப் பார்த்து ஜஸ்டிஸ் மந்திரிகள் திகைத்துப் போனார்கள். சேலம் சுப்ரமணியம், போன்ற "பிளேட்" பிரசங்கிகளிலிருந்து சத்தியமூர்த்தி போன்ற சமயோசித வாசாலர்கள் வரை ஆங்காங்கு வீரகர்ஜனைகளும் இடிமுழக்கங்களும் புரிந்த ஆரவாரத்தில் ஜரிகைத் தலைப்பாகைக்காரர்கள் நடுங்கினார்கள். தேர்தல்களில் காங்கிரஸுக்கு எதிராக நேருக்குநேர் நின்று போரிடக் கூடிய ஆண்மையில்லாமல் தங்கள் கையிலிருந்த அதிகாரத்தைக்கொண்டு மறைமுகமாக எவ்வளவு தில்லுமுல்லுகள் செய்யலாமோ அவ்வளவையும் செய்தார்கள். இவற்றையெல்லாம் மேடைகளில் அம்பலப்படுத்தி எப்படியும் காங்கிரஸ்காரர்கள் வெற்றி முழக்கினார்கள். எதிர்த்து நின்றவர்கள் டெபாஸிட்டைக் கூட இழந்து ஓடினார்கள். 1936-ல் என்று நினைக்கிறேன். திருச்சி ஜில்லாபோர்டு தேர்தல்களுக்கு முன்பு இந்த ஜில்லாவை காவேரியை நடுவாக வைத்து இரண்டாகப் பிரித்தார்கள். காட்டுப்புத்தூர் ஜமீந்தாரை ஒரு போர்டுக்காவது தலைவராகக்கொண்டு வந்துவிட வேண்டுமென்றுதான். அவர்களின் தந்திரம் அப்போது ஓரளவுக்குப் பலிக்கவும் செய்தது. ஆனால் மறுபடியும் ஓரிரு மாதங்களில் முருகூர், மாரிமுத்துப் பிள்ளை—காங்கிரஸ்காரர்—ஜஸ்டிக்கக்ஷிக்காரருக்குப் பதில்—தலைவராக வந்து விட்டார். திருச்சி முனிசிபாலிடியில் தங்கள் கக்ஷியிலிருந்த—ரத்தினவேலுத் தேவரே தலைவராக இருந்த காலத்திலும்—அவர் மந்திரி சபையினரை மதிப்பதில்லை யென்ற காரணத்தினால் அவரைப் பதவியிலிருந்து விலக்கிப் பார்த்தார்கள். மீண்டும் அவரே தலைவராக வந்ததைக்கண்டு முகத்தில் கரியைப் பூசிக்கொண்ட கோபத்தால் திருச்சி நகரசபையை கொஞ்சகாலத்துக்கு மூடி வைத்தார்கள். பல ஜில்லா போர்டுகளைத் தங்கள் சௌகரியப்படி பிரித்தார்கள், மறுபடியும் ஒட்டினார்கள். இப்படி அவர்கள் செய்த திருவிளையாடல்களை இப்போது நினைத்தாலும் இரக்கமும் சிரிப்பும் வருகிறது.

அந்தக்காலத்திலாவது ஸ்தலஸ்தாபனத் தேர்தல்கள் உடனுக்குடன் காலாகாலத்தில் நடைபெற வில்லை யென்றால் பொது மக்கள் மனஸ்தாபப்பட இடமிருந்தது. தேர்தல்களை நடத்தித் தீர வேண்டிய நிலையில் மந்திரிகளும் இருந்தார்கள். ஏனென்றால் அப்போது பொது மக்களுக்கு சுதந்திரம் என்ற பெயரால் வழங்கப்பட்ட இரட்டையாட்சி முறையில் இரண்டொரு விஷயங்களில் மட்டுமாவது பொது மக்கள் தங்கள் பிரதிநிதிகளின் மூலம் ஸ்தல சுய ஆட்சியை நடத்திக்கொள்ள வேண்டுமென்று போராடிப் பெற்றவை ஜில்லா போர்டுகளும், பஞ்சாயத்து, நகரசபைகளும். அவற்றிற்குத் தேர்தல்கள் நடைபெறா விட்டால் தங்கள் சுதந்திரம் பறி போய் விட்டதாகப் பொது மக்கள் கூச்சலிட்டார்கள். மேலும் ஜஸ்டிஸ் மந்திரிகள் ஆங்காங்கு சுற்றுபிரயாணம் செய்யும் போது தங்களை வரவேற்று உபசாரப்பத்திரம் வழங்கவும் ஆட்கள் தேவைப்பட்டார்கள். இத்யாதி காரணங்களால் ஸ்தலஸ்தாபனத் தேர்தல்களில் தங்கள் சிஷ்ய கோடிகள் பெருவாரியாகப் பதவிக்கு வருவதில் ஜரிகைக் குல்லாய்க்காரர்கள் அக்கறை கொண்டு அதற்கான உபாயங்களைக்கூசாமல் செய்தும் வந்தார்கள்.

(5-ம் பக்கம் பார்க்க)

7-8-49

சிறுகதை:

# முடித்த கதை

"சூராஜ்"

"வெந்நீர் ஆறிப்போகிறது. வாரத்தில் ஒரு நாள் இன்றைக்காவது எண்ணெய் தேய்த்துக்கொள்ளும் உத்தேசம் உண்டா இல்லையா? என்று கேட்டுக்கொண்டே அடுக்களையினின்றும் வெளிவந்தாள் அம்புஜம்.

"கதை, கதை இதுதான் வேலை! என்ற வார்த்தைகள் பின் தொடர்ந்தன.

தறி கெட்டு சிந்தனுலோகத்தில் போய்க்கொண்டிருந்த என் கற்பனைக் குதிரையை மனலாயத்தில் கட்டிவிட்டு எழுதியவரையில் என் முடியாக்கதை'யை மேஜை மேல் வைத்துவிட்டு ஸ்நான அறையை நோக்கி நடையைக்கட்டினேன்.

என் கதை 'ஸென்ஸார்' செய்யப் பட்டுக்கொண்டிருந்தது. (விவாகமான கதாசிரியர்களுக்கு இது ஒன்றும் புதிய செய்தி அல்ல!)

குழவிப் பருவத்தில் சற்று அதிகப்படியான 'கோரோஜனை' பிரயோகமாகி விட்ட காரணத்தாலோ என்னவோ—சாதாரண வீட்டுப் பேச்சுக்களே 'கரகரப்பிரியா' ராகத்தில்தான் நடக்கும் எங்கள் வீட்டில். மனதுக்குள் படிப்பதாக எண்ணி ஆபீஸ் அறையில் என் மனைவி கதையைப் படித்தது—பாத்ரூமில்—என் செவியைச் செவிடாக்கிற்று.

* * *

பூங்குளம்—உண்மையிலேயே பெயர்ப் பொருத்தம் கொண்ட அழகான ஊர். அதிகப் பணக்காரர் ஓரிருவரைத் தவிர சாமான்யர்கள் வீடு ஒரு ஐந்து ஆறுதான் உண்டு 'அக்ரகாரத்தில்'!

ஊருக்கு மாலைபோல ஆறு- நதியில் ஜலமில்லாத காலங்களில் அதுதான் 'மரீனு'.

சாமாவய்யர்—இரண்டு வேலி மிராசுதார்—ஒன்றே ஒன்று கண்ணே கண்ணு என்பதுபோல்—அவரது சீமந்த—கடைசி-குமாரன் 'ராஜன்'—ராஜகோபாலன் என்பதன் சிதைவு இது.

பி. ஏ. டிகிரி என்பது—இந்திர உலகில் சாயுஜ்ய பதவி என்பது—அவனுடைய தந்தையின் எண்ணம். அது காரணமாக சென்னையில் கல்லூரி ஒன்றில் ஹாஸ்டல்வாசி ராஜன்.

கல்லூரி வருடத்தில் திறந்திருக்கும் நாட்களைக் கணக்கிடுவதுதான் சற்று சிரமமே தவிர—மூடியிருக்கும் நாட்களைக் கூறுவது சுலபமல்லவா? அந்த—சற்றேரக்குறைய ஆறேழு மாதங்களும் ராஜனுக்கு பூங்குளம்தான் விடுமுறை வாசஸ்தலம்.

கல்லூரி நடைபோட்டுக்கொண்டு—பட்டணத்து ஐயர் என்று ஊர் மக்கள் கட்டியம் கூற கிராம வலம்' வருவதில்—அவனுக்கு ஒரு அலாதி குஷி.

பூங்குளம் கிராமத்தில் சாமாவய்யர் வீட்டு கிணறு—பிரசித்தமானது—கொஞ்சம் பரோபகாரச் சிந்தனையுள்ளதும்கூட— கிணற்றடியில் பாதாள உலகச் சர்க்கரை ஆலை தொழில் படுகிறதோவென ஐயுரும் அளவுக்கு—ருசி மிகுந்தது தண்ணீர்—அக்ரகாரத்திற்கு 'ஜல ஸப்ளை' அங்கிருந்துதான்.

ராஜன் சென்னையிலிருந்து வந்து இரண்டு மூன்று நாட்கள்தானிருக்கும். பழக்கமான 'ஹிந்தி டியூன்' ஒன்றைச் சீட்டியடித்துக்கொண்டு துணி துவைப்பதில் ஈடுபட்டிருந்தான் ராஜன் அக்கரையுடன்.

கண்கள் பக்கவாட்டில் திரும்பியபோது கண்காட்சி!

குடமேந்திய அணங்கு—கொவ்வைக் கனிவாய்—குமிழ் சிரிப்பு—கொஞ்சும் விழிகள்—பொறுமை கடக்கும் நிலையில் நின்றிருந்தாள்.

'இவள் யார்'? என்ற ஒரு புதிர் உதயமாக—தன் குடத்தை விடுதலை செய்து—வரும் குடத்திற்கு வழி கொடுத்தான் ராஜன்!

கிராமப்பெண்ணுக்கு இயல்பான நாணத்துடன்—பரபரப்பாக நீர் மொண்டுகொண்டு சென்று விட்டாள் அவள். சும்மா போகக் கூடாதா? திரும்பியென்ன பார்வை வேண்டியிருக்கிறது? —பிரம்மசாரிப் பெண்களிடமே இதுதான் பிடிப்பதில்லை!

அம்மா—பட்டணத்தில் வயிறாரச் சாப்பிட்டிருக்க முடியாத தன் மகனுக்கு—வேளைக்கு ஒரு உணவு செய்து கொடுத்துக்கொண்டிருந்தாள். அவன் அம்மா செல்லம்! புரியாத பிரச்னைக்கு விடை தேட—தோசை உள்ளே சென்றவண்ணம் ராஜன் ஆரம்பித்தான்.

"ஏனம்மா! நம் எதிர்வீட்டில் புதிதாக யாராவது வந்திருக்கிறார்களா என்ன?

'அந்தக்குட்டி'—கண்களில் பட்டு விட்டாள் போலிருக்கிறது. அதுதான் பையன் கன அக்கரையாய் விசாரிக்கிறான். அம்மா சிரித்தாள். "நம்ம ஊர்ப் பள்ளிக்கூடத்திற்குப் புதிதாய் மாற்றலாகி வந்திருக்கிறார் ஒரு வாத்தியார். அவர் பெண்தான் அந்த சரஸு—நல்ல சமத்து—பாவம் தாயற்றது! வீட்டு வேலைகளையெல்லாம் தானே கவனித்துக் கொள்கிறது"

இது போதாதா?

எதிர்வீட்டு வாத்தியார் ராஜனின் நண்பரானார். கொஞ்சம் கொஞ்சமாக பேச ஆளில்லாப் பெருங்குறையை—ஒருவாறு போக்கினார் அவர்.

ஒரு நாள் "ஸார் இன்றைக்கு நம் மாத்தில் சாப்பாடு"!—என்று அவர் கூறியபோது—ராஜனுக்கு என்னவோ செய்தது!

வேண்டாமென்று மறுக்க அவனுக்கு மூளைக்கோளாறு? என்ன?

சரஸு—கிணற்றடிப்பெண்தான் பறிமாறினாள்! அவள் நடையிலே ஒரு பதட்டம். முகத்திலே ஒரு குறுகுறுப்பு. ராஜன் இலைக்கு எதிர் வரும்போதெல்லாம் ஏன் அவள் முகமெல்லாம் 'குப்' பென்று வியர்த்து விடுகிறது.

பக்கத்தில் வாத்தியார்—இருப்பதையுமறியாது—இந்தப் பொல்லாக்கண்கள் சந்தித்துக்கொண்டன. துடிக்கு வாய்கள் புன்முறுவல் கொண்டன.

'எதிர்வீட்டு சமையல் எப்படி' என்றாள் அம்மா குறும்பாக.

"உன் சாப்பாடுமாதிரி டவேஜோர்" என்றான் ராஜன் சிரித்தபடி.

நன்றாகத்தானிருக்குமென்று சாப்பிடப்போவதற்கு முன்பே தெரியுமே! என்றாள் அவள். அவளும் பெண்தானே!

விடுமுறை நாட்கள் முடிவை நெருங்கின..................

2

உடை உடுத்திக்கொள்ள அறைக்கு வந்தேன், "என்ன! கதையை என் முடிக்கவில்லை" என்றாள் அம்புஜம் என்னைப்பார்த்து.

"அதற்குத்தான் வழி புரியவில்லை கற்பனைக்குதிரை சண்டியடிக்கிறது. அந்த வாத்தியாரைச் சாக அடிக்க வேண்டும். ......இல்லையென்றால் என் மனைவி ரௌத்ராகாரமாவாள்.

எதற்காக அவரைக் கொல்ல வேண்டும்? யாரையும் கொல்ல வேண்டாம். நான் கதையை முடித்துத்தரட்டுமா? என்றாள் குறும்பாக.

எங்கே—வரும் வெகுமதியில் பாதி உனக்குஎன்றேன் சிரித்தபடி "திரும்பி வந்தால்" என்றாள் அவள்.

"அடுத்த பத்திரிகைக்கு அனுப்பும் தபால்செலவு உன்னுடையது, என்றேன் நான். அவள் ஆரம்பித்தாள்.

விடுமுறைகழிந்து ஊருக்குப போகிறார். அந்த அசட்டுப்பிள்ளை. அங்கு போய்க் கன்னு பின்னு வென்று கடிதமெழுதுகிறார் தந்தைக்கு "அவளிடம் மனத்தைப் பறிகொடுத்துவிட்டேன். அப்படி இப்படியென்று வெட்கமின்றி அந்த அசட்டுப் பிள்ளையின் அப்பாவித் தந்தை எங்கே மெரினு பீச்சில் விழுந்து மகன் செத்துவிடுகிறானோ என்று பயந்து—தானே வலுவில் வாத்யாரை—அந்தப் பெண்ணின் தந்தையைப் பார்த்துப் பேசுகிறார்.

தந்தை மகளைக் கலக்கிறார். பெண் நினைக்கிறாள் "இந்த அசட்டு மனிதருடன் எப்படிக் காலட்சேபம் செய்வதென்று. பிறகு, நாம் போய்தான் இந்த மனிதரைச் சமத்தாக்க வேண்டுமென்று பரிதாப உணர்ச்சி தூண்ட கல்யாணத்திற்குச் சம்மதிக்கிறாள். நல்ல சுபயோக சுபதினத்தில் அவர்கள் தம்பதிகளாகிறார்கள். அந்த அசட்டு எழுத்தாளரைச் சமத்தாக்கும் திருப்பணியில் இன்று வரை ஈடுபட்டு வருகிறாள் பெண்...

"பலே! எழுத்தாளன் மனைவி என்ற பதவிக்குத் தயாராகிக்கொண்டுதான் வருகிறாய் நீ. சொந்தமாகக் கூட கதை எழுத ஆரம்பித்துவிடலாம். இந்தக்கதை சம்பந்தப்பட்டவரையில்தான் ஒரு சங்கடம். விறுவிறுப்பே இல்லாமல் 'சப்' பென்று இருக்கிறது என்று ரஸிகர்கள் கூட்டம் முகத்தைச் சுளிக்கும்படியாக கற்பனையாக..... ...

"கற்பனை என்று இன்னொரு முறை சொல்லாதீர்கள். பெயர் மாற்றத்தோடு சுய புராணம் பாடினால் விறுவிறுப்புக்கு எங்கு போவது. கதையுடன் ஊறுகாய் ஏதாவது சேர்த்தனுப்பினால்தான் உண்டு என்றாள் அவள்.

அதன் ஆமோதிப்பு ஒலிபெருஞ் சிரிப்பாக வடிவெடுத்தது என் உதட்டினின்று.

**விளம்பரங்கள்.**

14 ஆண்டுகளாக வாரந் தோறும் தவருது பிரசுரமாகி பதினுயிரக் கணக்கான தமிழ் மக்களை மகிழ்விக்கும் "சிவாஜி" உங்கள் வர்த்தகத்திற்கு ஏற்ற விளம்பர சாதனம். விகிதங்கள் மிகக் குறைவு.

# சிவாஜி

ஆசிரியர் :—திருலோக சீதாராம்

கோட்டை 14 | திருச்சி, 7—8—49 விரோதி-ஞ ஆடி-மீ, 23-வ. | முற்றுகை 36

**"சிவாஜி" சந்தா**

ஆண்டு 1-க்கு ரூ. 3 8 0
தனிப்பிரதி அணு. 1
ஒரு வருஷத்திற்கு குறைந்த சந்தா கிடையாது.

மானேஜர் : சிவாஜி
தபால் பெட்டி நெ. 332
தெப்பக்குளம் P. O.
திருச்சிராப்பள்ளி.


# விடுதலை பெற்றும் வெளியார் ஆதிக்கம்?

## தேசீயப் புனருத்தாரணத்தில் அன்னியர் மூலதனம்!

### நம்முடைய சிக்கல்கள்பற்றி

### பேராசிரியர் ஏ. வி. நாத்.

ஆண்டுதோறும் கப்பல் கப்பலாக வெள்ளியும் தங்கமும் விளைபொருளும் இந்தியாவை விட்டு வெளி நாடுகளுக்குச் சென்றுகொண்டிருந்தன. நாணயமாற்று ஒப்பந்தங்கள், வர்த்தக உடன்படிக்கைகள், வேற்று நாட்டு நிபுணர்களை இறக்குமதி செய்தல், வெள்ளை அதிகாரிகளின் சம்பளம், இப்படிப் பல துறைகளிலும் நம்முடைய செல்வம் நமக்கு நஷ்டமாகிக்கொண்டிருந்தது.

விடுதலை கிடைத்தால் இவற்றையெல்லாம் தடுத்து நிறுத்தி நம்முடைய நாட்டைப் புதிய வளமும் பெருகிய செல்வமும் உடையதாகச் செய்துவிட முடியுமென்ற நம்பிக்கையும் ஆவலும், வேகமும், வீரமும்படைத்துச் செயல் புரிந்தோம். அன்னியர் வெளியேறி விட்டனர். ஆட்சி பீடத்தில் நம்முடைய தலைவர்கள் அமர்ந்தார்கள்.

விடுதலை கிடைத்த சேதி உலகெங்கும் அறிவிக்கப்பட்டது. ஏனைய நாடுகள் நம்முடைய சுயேச்சையை ஒப்புக்கொண்டு தோழமை கொண்டாடினார்கள். தேச தேசங்களிலும் நம்முடைய ராஜ தூதர்களை வரவேற்று இடமளித்து நம்மைக் கௌரவிக்கவும் செய்தார்கள்.

உலகப் பொது மன்றத்தில் இந்தியாவின் தனித்தன்மை ஒளிவிட ஆரம்பித்தது. ஐக்ய நாடுகள் சங்கத்தில் நமது சங்கம் வலிமை பொருந்தியதாயிற்று. கீழ்த்திசை நாடுகளின் தலைமை இந்தியாவுக்கே என்று உலகம் ஒப்புக்கொள்ளத் தக்கவாறு ஆசிய நாடுகளின் ஸ்தாபனம் ஒன்றையும் அண்மையில் டில்லியில் தோற்றுவித்தோம். உள்நாட்டில் முடியரசுகளாக இருந்த சமஸ்தானங்களை யெல்லாம் ஐக்ய இந்தியாவின் பிடிப்பில் கொண்டுவந்துவிட்டோம்.

யாவும் சரிதான், மேல் மட்டத்தில் காரியங்கள் வேகமாகவும் வெற்றிகரமாகவும் தோன்றுகின்றன. ஆனால் நம்முடைய் சொந்த அரசியல் நிர்வாகத்தில் அடிப்படையான சிக்கல்கள் இன்னும் தீரவில்லை. தீமைகள் மறையவில்லை. அன்னியத் தொழில் வாணிபம் ஆகியவற்றின் அழுத்தமான பிடிப்பு இன்னும் அடிப்படையில் அப்படியே ஒட்டிக்கொண்டுதான் இருக்கிறது. அதுமட்டுமல்ல, மேலும் அது நடிமிடையே வேரூனறி வளரவே செய்கிறது. இந்த நிலையில்தான், நாம், நமது நாட்டில் பண வீக்கம், விலைவாசிகள் உயர்வு, உற்பத்திக் குறைவு, தொழில் ஊக்கமின்மை, பணத் தட்டு ஆகியவற்றால் பொருளாதார நெருக்கடியை சமாளித்தாகவேண்டிய நிலையில் இருக்கிறோம். இந்த நெருக்கடியின் காரணமாக வெளி நாடுகளுடன் நமக்குள்ள பிரச்னைகளும் சிக்கலாகிக் கொண்டிருக்கின்றன.

சுதந்திரமடைந்துவிட்ட தேசம் என்ற முறையில் இப்போது நம்முன் உள்ள ஒரே கவலை "சென்ற இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலாக அன்னிய நலனுக்கும் வளர்ச்சிக்குமே நம்முடைய வாழ்வைச் சூறையாடிவிட்டு மறைந்த ஏகாதிபத்தியன் காலடிகள் முற்றிலும் மறைந்து, விரைவில் நமது அரசியல் பொருளாதார, சமூகச் சீர்கேடுகளும், சிக்கல்களும் ஒழிந்து, புதிய விஞ்ஞான சாதனைகளைப் பயன்படுத்தி நமது சமூகத்தின் ஒவ்வொரு அசைவும் பயனும் வெற்றியுமுடையதாகச் செய்து, இன்றைய நிலைமையைச் சமாளித்து முன்னேறவும், புதிய இந்தியாவுக்கு ஒருவடிவும் வண்ணமும் கொடுக்கும் வழிகள் என்னென்ன என்று ஆராய்ந்து செயல் புரிவதே" யாகும்.

நாம் இன்று வாழும் உலகத்தின் போக்கு முற்றிலும் விஞ்ஞானக் கலை நுணுக்கங்களையும் உலகாயத அமைப்புக்களில் பெறும் வெற்றியையுமே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது. எனவே நாம் பெற்ற விடுதலையின் முழுப் பயனும நமக்கு வசமாக வேண்டுமானால், எபபடியாவது உலகத்து ஏனைய நாடுகளின் யந்திர, விஞ்ஞானத் திறமையை ஒத்த அளவிலாவது நம்முடைய சக்தியைப் பெருக்கிக் கொள்வதுடன் அவற்றை நமது பொருளாதார வெற்றியாகவும் செய்து கொள்ள வேண்டும்.

ஆனால், வெளி நாட்டிலிருந்து நமககு மூலதனம் வரவேண்டியிருக்கிறது. உலகப் பாங்கியிலிருநது நமக்குக் கடன் தேவைப்படுகிறது. பிரிட்டனிடமிருந்து ஸ்டாலிங் நிலுவைகள் வசூலாகவேண்டும். உலக வாணிபததைத் தன் பிடிப்பில் வைத்திருக்கும் அமெரிக்காவுடன் டாலர் ஏற்பாடுகள் செய்து மூல யந்திரஙகள், அல்லது பொருள்களை இறக்குமதி செய்தாக வேண்டும். அரசியல் தத்துவார்த்த அடிப்படையில் நமது சுதந்திரம் வாயளவுக்குப் புகழ் பெற்றாலும் நடைமுறையில் நமது வாழ்வின் பிரச்னைகள் வெளி நாடுகளின் தயவில்தான் இருக்கின்றன.

உள்நாட்டில் அரசியல் ஆதிக்கமும் அதிகாரமும் நம்முடைய கைக்கு வந்தாலும், வெளியாரின் தொடர்பு இங்கும் நம்முடைய தேசீயப் புனர் நிர்மாணத் திட்டங்களைத் தடுத்து நிறுத்தவே செய்கின்றன.

வெளியார் தொடர்பு நமக்கு வேண்டியதில்லையா என்று கேட்கலாம். சேர்ந்து வாழ்வது உயிரின் தேவை என்ற அடிப்படை உண்மையே இயற்கையின் நியதியாக இருக்கும் பொழுது யாருடைய தொடர்பையும் வேண்டாமென்று நாம் மறுத்துவிட முடியாது. காமன்வெல்த் உறவுகூட நமக்கு இன்னும் வேண்டியதுதான் என்று பிரதமர் நேரு சமீபத்தில் தானே முடிவு செய்தார்.

வெளிநாட்டு உறவு பல துறைகளிலும் நமக்கு வேண்டியதுதான். ஆனால் அந்தஉறவு நமக்கு எந்த முறையில்—எந்த அளவில—எந்த பயனில்—நமக்குக் கிடைக்கிறது, அல்லது நாம் பெறுகிறோம் என்பதில் தான், வெளி நாட்டாரின் உறவினால் நாம் முன்னேறுவதும் பின்னிடைவதும் அடங்கியிருக்கிறது.

வெளியாரைப் பொறுத்தவரையிலும் அவர்கள் யாராயிருந்தாலும் நம்முடன் அவர்கள் தொடர்புகொள்ள விரும்புவது நம்முடைய நன்மையை முன்னிட்டு என்று நம்பமுடியாது. அவர்கள் தங்கள் நலனைக் காத்துக்கொள்வதில் அக்கறை கொள்வதை நாம் தவறென்று கூறுவதற்கில்லை. ஆனால் நம்மை அவர்களுக்கு அடிமைப்படுத்தி விடாத உறவு நமக்கு இருக்கவேண்டுமல்லவா? சற்று விளக்கமாக ஆராய்வோம்.

புதிய இந்தியாவை உருவாக்குவதற்கு நாம் பல முற்போக்கான திட்டங்களைச் செயலாற்ற வேண்டியிருக்கிறது.

(9-ம் பக்கம் பார்க்க)

# அனுபவ ஞானியின் குறிப்புகள்

திருலோக சீதாராம்

## யு. எம். எஸ். ரேடியோ உற்பத்தி.

அமெரிக்கா, இங்கிலாந்து, நாடுகளில் தக்க ஏற்பாடுகளைச் செய்து வைத்துவிட்டு இந்தியா திரும்பும்போது, அவர் உத்தேசித்திருந்தபடி புதிய தொழிற்சாலைகளைத் தோற்றுவிப்பதும் நடைபெற்றுக்கொண்டிருந்த எலெக்ட்ரிக் மோட்டார் உற்பத்தி சாலையை விரிவுபடுத்துவதும் அவ்வளவு எளிதாக இருக்கவில்லை. ஆயினும் 1941-ல் யு. எம். எஸ். ரேடியோ உற்பத்தி சாலையை அவர் தொடங்கி விட்டார். இதனைத் திறந்து வைத்தவர் நமது சிலப்பதிகாரச் செம்மல் சண்முகம் செட்டியாராவர்.

நாயுடு தன் சுற்றுப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு ஊர் திரும்பியவுடனே, தான் உத்தேசித்துள்ள புதிய தொழிற்சாலைகள் பற்றி, அப்போது கொச்சிதிவானாக இருந்த சண்முகம் அவர்களுக்கே முதன்முதலில் அறிவித்தார். கொச்சி சமஸ்தானததில் நாயுடு எந்த முயற்சியைத் தொடங்குவதானாலும் ஆதரவளிக்கத் தயாராயிருப்பதாக சண்முகம் அவர்களும் விடையளித்தார். பலப்பல காரணங்களை முன்னிட்டு கொச்சியை ஏற்ற இடமாகக் கொள்ள நாயுடு அவர்களால் முடியவில்லை. ஆயினும் ஏதாவது ஒரு தொழிற்சாலையை உடனே ஆரம்பித்து விடுவதென்ற வேகம் மட்டும் அவருக்கு இருந்தது. இத்தருணத்தில் நமது அரசாங்கத்தார் மூவாயிரம் ரேடியோ செட்டுகளுக்கு அனுமதி வழங்க முடிவு செய்திருப்பதாகப் பத்திரிகைகளில் பாாத்தார் நாயுடு. உடனே அவருடைய ஊக்கம் அந்தத் திசையில் சென்றதன் காரணமாக யு. எம். எஸ். ரேடியோ உற்பத்தித் தொழிற்சாலை உருவாயிற்று. கொச்சி திவானாக இருந்து ஓய்வு பெற்ற சண்முகம் அவர்கள் அதே சமயத்தில் அமெரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு யுத்த தளவாடங்கள் வாங்குவதற்கென்ற காரியத்திற்காக நியமிக்கப்பட்ட குழுவின் ஊக்கத்திற்கு உதவியாகவுமிருந்தது. எனவே அவர் அமெரிக்கா புறப்பட்டுச் செல்லுமுன்பு எப்படியும் ரேடியோ உற்பத்தியைத் தொடங்கி அதைத் திறந்து வைக்க அவரையே அழைக்க வேண்டுமென்றும் விரும்பி, அதற்கான கட்டிட நிர்மாணம், யந்திர அமைப்பு ஆகியவற்றில் நாயுடு முனைந்தார்.

ரேடியோ, செல்வர்களின் உல்லாசப் பொழுது போக்குக்கான போகப் பொருளாக— ஆடம்பர வஸ்துவாகவே இன்றுகூட நம்முடைய நாட்டில் கருதப்பட்டு வருகிறது. ரேடியோ அறிவு வளர்ச்சிக்கு ஏற்ற அருமையான சாதனம் என்ற உண்மையை, ஏழைகளும, நடுத்தர வகுப்பினரும் உணர்ந்து கொள்ள முடியாமலிருப்பதன் காரணம் ரேடியோ செல்வர்கள் மட்டுமே விலைகொடுத்து வாங்கக் கூடியதாக இருப்பது தான். சமீபகாலம் வரையில்கூட ரேடியோ செட்டுகளை வரவழைப்பதிலும், வைத்து அனுபவிப்பதிலும், தேவையான அனுமதி வழங்குவதில் அரசாங்கம் மிகவும் கண்டிப்பான சட்டங்களை நடத்தி வந்ததுண்டு.

இரண்டாவது உலகப்பெரும் போர் தோன்றிய பின்னர் தான் ரேடியோவை நல்ல பிரசாரக் கருவியாக உபயோகிக்க முடியும் என்ற உண்மை அரசாஙகத்துக்கே விளஙகலாயிற்று என்பது தவறல்ல. ஒவ்வொரு விநாடியும் எந்த நேரத்தில் நம்முடைய தலையில் குண்டு விழுமோ என்று மக்கள் அஞ்சி நடுஙகிய காலததில் நேசநாட்டுத் துருப்புக்களின் முன்னேற்றத்தையும வெற்றியையும், அச்சு நாடுகள் பிடிக்கும் ஓட்டத்தையும் உடனுக்குடன் ஒலிபரப்புவது யுத்தத்தின் வாடையே படாத இந்திய நாட்டின் அரசியல் நிர்வாகத்தில் மக்களின் அமைதிக்கும் மன நிம்மதிக்கும் அவசியமாகி விட்டிருந்தது. ஜனங்கள் இச்சமயத்தில ரகசியமாக வீடுகளில் அமர்ந்து பெர்லின், டோக்கியோ, சிங்கப்பூர் போன்ற இடங்களிலிருந்து எதிரிகள் ஒலிப்பரப்புவதை ஆவலுடன் கேட்டுத்தெரிந்து கொள்வதில் பெரும் பரபரப்புக் கொண்டிருந்தார்கள். அரசாங்கத்தாருக்கு இது தெரியாமல் இல்லை. தெரிந்தும் கூட தனிப்பட்டவர்கள் எந்த நிலையத்திடமிருந்து செய்தியை கேட்டு அறிவதில் தடை செய்யவில்லை. மற்றவர்களுக்கு அவற்றைப் பிரசாரம் செய்வதுதான் இங்கே குற்றமாகக் கருதப்பட்டது.

ஜெர்மனியில் மக்கள் ரேடியோ கேட்பதில் இருந்த நிபந்தனைகள் மிகவும் கொடுமையானவை. நாஜி அரசாங்கம் ஒலிபரப்பும் செய்தி தவிர திருட்டுத்தனமாகக்கூட வேறு நிலையங்களின் செய்தியை ஜெர்மனியில் யாரும் கேட்க முடியாது. துப்பறியும் நிபுணர்கள் இப்படி வெளி நாட்டுச் செய்திகளை, வேறு வேறு நிலையங்களின மூலம் கேட்பவர்களைக் கண்டு பிடித்துவிட்டால் அப்படிக்கேட்டவர் குற்றவாளியாகக் கருதப்பட்டு உடனே சுட்டுக்கொலலப் படுவார். துப்பறிவோருக்குத் தெரியாமல் கேட்பதென்பது நடவாத காரியம். ஏனெனில் ரேடியோ பெட்டிகள் படுக்கைக்கு அடியில் ஒளித்துவைக்கப்பட்டிருந்தாலும் இரும்புப் பெட்டிக்குள் இருந்தாலும் அவற்றை மோப்பம் பிடித்துக் காட்டும் நுண்ணிய யந்திர சாதனங்கள் துப்பறிபவர்கள் வசம் கொடுக்கக்பட்டிருந்தன.

இந்தியாவில் ரேடியோ செய்திகளை மக்கள் தெரிந்துகொள்வதில் தாராளமான அனுமதி கொடுக்கப்பட்டிரா விட்டால் காரணமில்லாத பயத்தினால் அமைதியே கெட்டுப்போயிருக்கலாம். எனவே அதிகப்படியான ரேடியோக்களைத் தருவித்து உபயோகிப்பதில் மக்களுக்கு உற்சாகமளித்தனர். அப்போது நம்மை ஆண்டு கொண்டிருந்த அரசாங்கத்தினர். ஆயினும் இந்தியாவிலேயே ரேடியோ உறபத்தியைத் தொடங்கும் முயற்சிகள் அரசாஙகததாரின ஆதரவுக்குப் பாத்திரமாகவில்லை.

யு. எம். எஸ். ரேடியோ உற்பத்தி இத்தகைய சூழ் நிலையில் ஒரு அரிய சாகஸம என்றுதான் கூறவேண்டும். தொழிறசாலைத் திறப்புவிழாவில் நாயுடு அவர்களின் வரவேற்புரையில் காணப்படும் சில ரஸமான புள்ளி விபரங்களை இஙகே தருகிறேன்.

"சுமார்பதிமூன்று கோடிமக்களைக்கொண்ட அமெரிக்க நாட்டில் 650 ரேடியோ ஒலிபரப்பி நிலையங்கள் வேலை செயகின்றன. ஆனால் நாற்பது கோடி மக்கள் நிறைந்த இந்திய நாட்டில் உருப்படியாக ஒரு பத்து ரேடியோ நிலையங்கள கூடக் கிடையாது. அமெரிக்காவில் ஒவ்வொரு வீட்டிலும் ரேடியோவும் டெலிபோனும் உண்டு. ஒரே வீட்டில் அறைக்கு அறை ரேடியோ டெலிபோன் வசதிகள் உள்ளனவும் உண்டு. உதாரணமாக சிகாகோ நகரத்தில், ஸ்டீவன்ஸ் ஹோட்டல், ஷெர்மன் ஹோட்டல், என்ற இரண்டு விடுதிகளில் மட்டும் முறையே மூவாயிரம், இரண்டாயிரம் என்ற எண்ணிக்கையில் ரேடியோக்களும் டெலிபோன்களும் உள்ளன.

(6-ம் பக்கம் பார்க்க)

# விக்கிரமாதித்தன் சிங்காதனம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

இவற்றையெல்லாம் அடியோடு வெறுத்த காங்கிரஸ்காரர்கள் இன்று விடுதலை பெற்றுவிட்ட நாட்டில் சுதந்திர மந்திரிகளாய் மாகாணங்களிலும் மத்தியிலும் செங்கோல் ஓச்சுறுர்கள். பரிபூர்ண சுயஆட்சியே வந்துவிட்ட பிறகு ஜில்லா போர்டுபோன்ற ஸ்தலசுயஆட்சி அமைப்புகளே தேவையில்லாமல் போய்விட்டன. எனவே இப்போது இந்தத்தேர்தல்கள் வந்திராவிட்டால் யாரும் அழமாட்டார்கள். இடைக் காலத்தில் ஸ்பெஷல் ஆபீஸர்கள் செய்து வந்தநிர்வாகத்தில் பொது மக்களுக்குப் பெரிய அபாயம் ஒன்றும் வந்துவிடவில்லை. ஆனுலும் கூட எப்படியோ ஜில்லா போர்டுகளுக்கு மறுபடியும் தேர்தல்கள் வந்து விட்டன.

நாட்டின் அரசியல் ஆதிக்கத்தை ஆட்டிப் படைக்கும் காங்கிரஸ் கக்ஷி இவற்றில் தலையிடாமலாவது ஓதுங்கியிருந்தால் மெச்சத்தக்கதாயிருந்திருக்கும். அப்படித்தலையிட்டாலும் தங்கள் அதிகார வசதியை இதில் ஈடுபடுத்தாமலிருந்தாலாவது நன்றுயிருக்கும். பாவம், அப்படியிருந்து விட முடியவில்லை போலும்!

மாகாண மந்திரி சபையின் வரி விதிப்புக் கொள்கை மக்களிடை அதிருப்தியை விளைவித்திருக்கிறது. போதாக் குறைக்கு பழைய—புதிய மந்திரிகள்—சிலரைக் குற்றவாளிகளாக்கி விசாரணைக்கு வழி செய்து விட்டார்கள். இந்த "உள்நாட்டுக் கலகம்" ஒரு பக்கம்; அத்துடன் புதிய அரசியலில் பொதுத் தேர்தல்கள் வருமுன்பு தங்கள் பலத்தைசோதித்துப் பார்த்து இப்போதே உறுதி செய்து கொண்டு விடவேண்டுமென்ற கவலை மறுபுறம். இப்படி எத்தனையோ காரணங்கள் இருக்கின்றன காங்கிரஸ் இந்தத் தேர்தலில் ஈடுபட்டிருப்பதற்கு. எனவே இதன் வெற்றி தோல்விகள் மந்திரி சபையையும் ஓரளவு மறைமுகமாக இன்றும், நாளையும் பாதிக்கவே செய்யும். இந்நிலையில் காங்கிரஸ்காரர்கள் வெற்றிபெற வேண்டி உதவி செய்வதில் பதவியிலுள்ளவர்களுக்கு அக்கரையும், துடிப்பும் ஏற்படுவது நியாயமென்று கூற முடியாவிட்டாலும் இயல்பு என்று ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். அப்படியானுல் இந்த முடிவைத் தொடர்ந்து வெற்றிக்கு அவர்கள் வேலை செய்வதும் இயற்கைதான்.

இந்த அடிப்படையை வைத்துக்கொண்டு பார்த்தால் பழைய ஜஸ்டிஸ் மந்திரிகளின் நிலைமைக்கு இன்று காங்கிரஸ் மந்திரிகளும் வந்துவிட்டதில் வியப்பில்லை. விக்ரமாதித்தன் சிங்காதனத்தை இங்கேதான் கொஞ்சம் நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும்.

வயது வந்தோர் வாக்குரிமை ஏற்றுக்கொள்ளப்பட்டு, வாக்காளர் பட்டியல் அச்சாகிக் கொண்டிருக்கும் நிலையில், மிகப் பழைய வாக்காளர் ஜாபிதாவை வைத்துக் கொண்டு தேர்தலைத் தொடங்கியது அவசரக் குடுக்

(8-ம் பக்கம் பார்க்க)




அறவலி காத்து நாளும் அன்னையின் பணிக்கென்றே நம்
உறையிலே உறங்கும் வீரம் உருவினோம் ஓங்கிவிட்டோம்.

திருச்சி. 7—8—49

# பொழுது போக்கும் சிறிய கதை

“ஸ்ரீராமறுத்தல் வேந்தனுக்குப் பொழுதுபோக்கும் சிறியகதை—நமக்கெல்லாம் உயிரின் வாதை” என்று கொலைக்களத்தில் நின்றுகொண்டு புரட்சிக் கவிஞன் முழக்கம் செய்ததாகப் புதுவைக் கவியரசர் பாடுகிறார்.

அரசாங்க அலுவலகங்களில் குறிப்பிட்ட எந்தக் காரியத்தையாவது காலாகாலத்தில் சென்று முடித்துக்கொண்டு திரும்புவது என்பது யாராலும் முடியாத காரியமென்றே தோன்றுகிறது, அரசாங்க சிப்பந்திகள் மேல் இதற்காக .வருத்தப்பட்டுப் பயனில்லை. அவர்கள் என்ன செய்வார்கள், பாவம்! சுமார் இரண்டு நூற்றாண்டுகளுக்கு மேலே இப்படி “இழுபறி” வேலை செய்து பழகிப் போன வர்க்கம் அது. திடீரென்று ஒரு நாளில் சுறுசுறுப்பாக வேலை செய்து காலாகாலத்தில் முடிவுசெய்யும்படிப்பு அவர்களுக்கு இதற்கு முன்பு யாரும் சொல்லிக் கொடுத்ததில்லை. சுதந்திர அரசாங்கம் ஏற்பட்டபின்னர் புதிதாக அரசியல் ஆதிக்கத்திற்கு வந்திருப்பவர்களாவது அப்படி ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பித்திருப்பதாகவும் தெரியவில்லை. ஆனால் புதிய எஜமானர்களும் பழைய சேவகர்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றுகிறவர்களாகவே மாறிவிட்டார்கள். உலகப் போரின் காரணமாகவும், இயற்கையின் விபரீதங்களினாலும், புதிய வாழ்வின் ஆரம்ப நிலையிலும், மற்றும் பலப்பல காரணங்களினாலும் இன்று நம்முடைய வாழ்வு எண்ணற்ற கட்டுப்பாட்டு உத்திரவுகளுக்குள் வட்டமிட்டுச் சுழல வேண்டியிருக்கிறது. ஆனால் இந்தத்தவிர்க்க முடியாத நெருக்கடிகளை சமாளித்து நாட்டின் நன்மை உயரவேண்டுமானால் அரசாங்க அதிகாரிகளும் பொதுமக்களும் ஒருவரையொருவர் அனுசரித்து நிலைமைகளை சமாளித்துக் கொள்ள வேண்டும். இந்த நிலையில்கூட நமது அரசாங்க அலுவலகங்கள் பழகிப்போன பழைய சிகப்பு நாடாத் தனத்திலிருந்து கணிசமான அளவுக்கு விடுதலை பெறவில்லை யென்பதைக் குறிப்பிடவேண்டி யிருக்கிறது.

ஓமாந்தூர் ரெட்டியார் பிரதமராக இருந்தபோது பாரதி பாடல்களைப் பொதுச் சொத்தாக்குவதற்காக அவரைப் பாரதி விடுதலைக்கழகம் அணுகி உதவிகேட்டது. அவரும் இதன் அடிப்படையான நல்ல நோக்கத்தைப் பாராட்டியதுடன் அதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டார். சுமார் ஒரு வருட காலப் போராட்டத்திற்குப் பின்னர் ஒருவாறு காரியங்கள் வெற்றிகரமாக முடிந்தன. தனது உரிமைகளை இலவசமாக விட்டுக் கொடுத்த திரு. ஏ. வி. எம் அவர்களையும், முன்னின்று இதற்கு உதவி செய்த பிரதமர் ஓமாந்தூர் அவர்களையும் பாராட்டி நன்றி தெரிவிப்பதற்காக சென்னையில் ஒரு தேநீர் விருந்து ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த விழாவுக்கு வந்திருந்து மகிழ்விக்கும்படி ஓமாந்தூராரை நமது ஆசிரியர் அணுகி அழைத்தபோது அவர் கூறிய விடை எவ்வளவு தூரம் இந்த சிகப்பு நாடா விஷயம் அவரையே மனம் நோகச் செய்திருக்கிறதென்பதை அறிவித்தது.

“அரசாங்கம் இதில் என்ன பிரமாதமாகச்சாதித்து விட்டது. அதற்காக நீங்கள் ·பாராட்டப் போகிறீர்கள். தன்னுடைய உரிமைகளை விட்டுவிடுவதாக ஏ. வி. எம். எழுதி ஒன்பது மாதங்களாகியும் சட்ட சம்பந்தமான சிக்கல்களாலும் சிப்பந்திகளின் தூக்கத்தாலும் ஆண்டு ஒன்று இடையில் கடந்துபோய்விட்டது. இவ்வளவுகாலம் வீணாகி விட்டதை முன்னிட்டு நாங்களல்லவா உங்களை அழைத்துப் பாராட்டி மன்னிப்புக் கேட்க வேண்டும்! என்று அவர் கூறினார்.

உதாரணத்திற்காக இந்த சம்பவத்தைக் குறிப்பிட்டோம். அரசாங்கப் பிரதமராக இருந்த ஒருவருக்கே காரியாலய வேலை முறைகளில் உள்ள வேகம் மிகவும் சலிப்பை உண்டாக்கி யிருந்தது என்ற உண்மையை விளக்க இது போதுமல்லவா?

பொதுமக்களைப் பொறுத்த வரையிலும், தங்களுக்கு வேண்டிய வசதிகளைப்பெற அரசாங்க அலுவலகங்களுக்கு நடப்பதை விட, அந்த வசதியில்லாமலேயே இருந்து விடமுடியாதா என்பதுதான் முதல் யோசனையாக இருக்கிறது.

விதைத்தானியம், ரஸாயன உரம், உழுபடைகள், வண்டிக் கட்டுகள், இவற்றை யெல்லாம் சர்க்காரின் கட்டுப்பாடுகளுக்குட்பட்டுப் பெற முயன்று உடனே அவற்றைப் பெற்ற விவசாயிகள் எத்தனைபேர் இருப்பார்கள் என்பதை விரல்விட்டுத்தான் எண்ண வேண்டியிருக்கும்

விவசாயக் கடன்கள், நில அடமானக் கடன்கள், கூட்டுறவுக்கடன்கள், போனஸ் பணம் ஏதாவது ஒன்றைப் பெற முயலும் விவசாயி வருஷக்கணக்கில் தவம் செய்யாமல் முடிகிறதாவென்பதை விசாரித்துத்தான் பார்க்கவேண்டும்.

வீடுகட்ட நினைக்கிறீர்கள். உங்கள் திட்டப்படி தயாரித்த பிளான் முனிசிபாலிடியில் அங்கீகாரமாக எத்தனை மாதங்கள் ஆண்டுகள் தேவையென்பதைக் கூறமுடியுமா? மின்சார வசதியோ குழாய் வசதியோ சுலபத்தில் பெற இயலுமா? தேவையான இரும்பு ஜன்னல்கள், சட்டங்கள், சிமிண்டு இவற்றில் ஏதாவது ஒன்றைத்தான் சொல்லுங்களேன், உங்கள் தேவையை உணர்த்தி உடனே உதவிபெற முடிந்தவர்கள் சாதாரணப் பொதுமக்களில் யாராவது உங்களில் இருந்தால்.

ரேஷன் முறைகளிலாவது வேகமும் திறமையும் எல்லா இடங்களிலும் காணமுடிகிறதா?

இவையெல்லாம் முன்பொரு காலத்தில் காலத்தைக் கடத்துவதற்கென்றே திட்டமிடப்பட்டு அன்னிய ஆட்சியாளர்கள் வகுத்த நிர்வாகச் செயல் முறை இன்னும் மாறுதலடையாமல் இருப்பதன் விளைவேயல்லாது வேறல்ல.

சில கண்ட்ரோல்கள் எதற்காக இருக்கின்றன வென்றே புரியவில்லை. சிலவற்றின் விளக்கங்கள் அவற்றை நடத்திவைக்கும் அதிகாரிகளுக்கே புரிவதில்லை இதனால் பொதுமக்களுக்கு எவ்வளவு கஷ்டங்கள் நேரிடுகின்றன வென்பதைக் கணக்கெடுக்க முடியாது.

பொதுமக்களின் வாழ்வு நிர்வாக யந்திரத்தின் பயிற்சி மேடையாகத்தான் இன்னும் இருக்கிறது. விரைவில் பயிற்சி முடிந்து பொதுமக்கள இயல்பான வாழ்க்கை நடத்தும் நாள் எப்போது வருமோ தெரியவில்லை.

---

# அனுபவ ஞானியின் குறிப்புகள்

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனால் இந்தியாவில் இருக்கும் ரேடியோக்களின் எண்ணிக்கை ஒரு லக்ஷம் கூட இருக்காது.

“உலகத்திலுள்ள டெலிபோன்களில் கிட்டத்தட்ட சரிபாதி படைத்திருக்கும் அமெரிக்காவில் சுமார் 2 கோடி டெலிபோன்கள் உபயோகத்திலிருக்கின்றன. இந்தியாவிலோ இவற்றின் எண்ணிக்கை · சுமார் 80 ஆயிரங்கள் தான்.”

நமது தொழில், வாணிபம், இல்லம் இவற்றின் சிறப்புக்கு ரேடியோவும் டெலிபோனும் இன்றியமையாதவை என்பதை அமெரிக்கா போன்ற நாடுகளைச் சுற்றிப் பார்த்திருந்த நாயுடு அவர்கள் உணர்ந்திருந்ததனால் தான், ரேடியோ உற்பத்தியில் அவருக்கு அவ்வளவு ஊக்கம் ஏற்பட்டிருக்கவேண்டும். நாயுடு அவர்களின் கணக்குப்படி நம்முடைய நாட்டின் தேவைக்கு ஒரு பத்து வருஷங்களில் ரேடியோக்களைச் செய்து குவிப்பதாயிருந்தால் நாளொன்றுக்கு சுமார் 5000 ரேடியோக்களை உற்பத்தி செய்ய வேண்டியிருக்கும் அல்லது பாகங்களைத் தருவித்து இங்கே உருவாக்க வேண்டியிருக்கும். ஆயினும் அனைவருக்கும் சாத்தியமான குறைந்த விலையில் உற்பத்தி செய்வது நமது நாட்டில் மிகக் கடினமாக இருக்கிறது. அமெரிக்கா போன்ற நாடுகளில் பத்து ரூபாய்க்கோ சற்று அதிகமான தொகைக்கோ ஒரு ரேடியோவை வாங்கிவிட முடியுமென்றால நம் நாட்டில் நூற்றுக் கணக்கிலும் ஆயிரகணககிலும் கூட ரோடியோப் பெட்டிகளின் விலையாக இருக்கிறது.

ரேடியோக்களை வெளியிலிருந்து தருவிப்பதைநிறுத்திவிட்டு நாமே உற்பத்தி செய்வதுதான் அனைவரும் வாங்கக்கூடிய விலையில் அவற்றை உருவாக்க வழி என்று நாயுடு ஆராய்ந்து அறிந்தார். அவருடைய புள்ளி விபரங்கள் பேசுவதைக் கேளுங்கள்.

“ஜப்பான் அல்லது வேறு எந்தநாட்டிலும் உற்பத்தியான ரேடியோ பெட்டிகளை பெட்டி ஒன்று 30 ரூபாய் முதல் 150 ரூபாய் வரை விலையில் நாம் இறக்குமதி செய்யக்கூடும். ஆனால், ஒரு ரேடியோவின் சகல பகுதிகளையும் தனித்தனியாக நாம் அமெரிக்காவிலிருந்து தருவித்தால் அவற்றின் விலை நமக்கு ரூபாய் ஆறு முதல் இருபதுக்குள் அடங்கிவிடும். நம் நாட்டு இளைஞர்களுக்கு ரேடியோ உருவாக்குவதுபற்றிய பயிற்சியை அளித்தால் இப்படித் தருவிக்கப்பட்ட பாகங்களைக்கொண்டே பெட்டி ஒன்று பத்து முதல் 30 ரூபாய்க்குள் அடங்கும்படியாக நாமே தயாரித்துவிடமுடியும். ஆனால் சிறிய அளவுப் பெட்டிகளை உபயோகிக்கு முன்பு ஒலிபரப்பு நிலயங்கள் ஏராளமாகப் பெருகவேண்டும். அரசாங்கத்தார் தாங்களே புதிய நிலயங்களை ஆரம்பிப்பதுடன் தனி நபர்களுக்கும் அனுமதி கொடுக்கலாம். இப்படி ரேடியோ ஒலிபரப்பி நிலையங்கள் அதிகரிக்குமாயின் கல்வி, தொழில், வர்த்தகம் ஆகிய சகல துறைகளிலும் மக்கள் பெரும் பயன் அடையும்படி செய்துவிடமுடியும்.

(தொடரும்)

# ரஷ்யாவின் நோக்கங்கள் என்ன?

இத்தாலிய சமாதான உடன்படிக்கையின் ஷரத்துகளை இத்தாலி மீறியுள்ளதாகவும், இதை பிரிட்டன் பிரான்ஸ் அமெரிக்கா ஆகிய நாடுகள் கண்டும் காணாதது போலிருந்து வருவதாகவும் சோவியத் அரசாங்கம் அண்மையில் பகிரங்கமாக குற்றச் சாட்டுகள் விடுத்தது வாசகர்களுக்கு ஞாபக மிருக்கலாம். பாரிஸில் நடைபெற்ற வெளிநாட்டு மந்திரிகள் கவுன்சில் கூட்டத்தைத் தொடர்ந்து ரஷியா வெளியிட்டு வந்த நான்கு வல்லரசு ஒத்துழைப்பு என்பது வெறும் வாயளவில் தான் என்பதற்குஇது ஒரு ருசிகரமான உதாரணமாகும்.

சமாதான உடன் படிக்கையை இத்தாலி மீறியுள்ளதென மார்ஷல் ஸ்டாலினும், எம். விஷின்ஸ்கியும் உண்மையிலேயே நம்புவார்களேயானால் அதற்கான நடவடிக்கை எடுக்கும் முறையும் அந்த உடன்படிக்கையின் 86 ஷரத்தில் அடங்கியிருக்கிறது. இந்த ஷரத்தின் படி அவ்வித குற்றச்சாட்டுகளை ரோம் நகரிலுள்ள அமெரிக்க, ரஷிய, பிரிட்டிஷ், பிரஞ்சு ஸ்தானீகர்கள் ஆராய்ந்திருக்க வேண்டும். ஸ்தானீகர்கள் எவ்விதமான முடிவுக்கும் வர இயலவில்லையென்றால் பிறகு பாரபட்சமற்ற "ஐந்தாவது நபரை" நியமிக்கும் படி ஐக்கிய நாடுகள் ஸ்தாபனத்தின் காரியதரிசியை கேட்டிருக்க வேண்டும்.

உடன் படிக்கையிலேயே கண்டுள்ள இம்முறையை சோவியத் யூனியன் கடைப்பிடிக்காதது ஏன்? இம்முறையைக் கையாளாமல் நம்பிக்கைத்துரோகமென குற்றம் சாட்டியுள்ளதேன்?

ரஷியாவின் இச்செய்கைக்கு ஒரு ராஜதந்திர காரண மிருக்கிறது. சமாதான உடன்படிக்கைகளை பல்கேரிய, ஹங்கேரிய, ருமேனிய அரசாங்கங்கள் மீறியுள்ளதாக மேற்கு வல்லரசுகள் கருதுகின்றன. இவ்விஷயத்தை உடன்படிக்கைகளில் கண்டுள்ள படி நான்கு வல்லரசு உறுப்பு மூலம் விவாதிக்க வேண்டுமென்றும் மேற்கு வல்லரசுகள் பிரேரேபித்தன. ஆனால் ரஷியா மேற்கு வல்லரசுகளின் இக் கோரிக்கையை ஒரேயடியாக நிராகரித்து விட்டது. ஆகவே தனது அண்டையிலுள்ள (மாஜி-எதிரி) கூட்டாளி நாடுகள் விஷயத்தில் மேற்கொள்ள தான் மறுத்த ஒரு முறையை இத்தாலி விஷயத்தில் கடைப்பிடிக்க வேண்டுமென சோவியத் அரசாங்கம் மேற்கு வல்லரசுகளைக் கேட்பது கொஞ்சம் குழப்பமாகத்தானிருக்கும்.

இதைத்தவிர மற்றொரு காரணமும் உண்டு. முதலாவதாக, சோவியத் யூனியனுக் கெதிரானதொரு ஆக்கிரமிப்புக்கான ராணுவ ஒப்பந்தத்தில் சேர்ந்து கொண்டுள்ளதாக ரஷியா இத்தாலிமீது குற்றஞ் சாட்டியுள்ளது. அட்லாண்டிக் ஒப்பந்தத்தின் வாசகங்களை மார்ஷல் ஸ்டாலினும் எம். விஷின்ஸ்கியும் நன்றாகப் படித்திருப்பார்களென்றே நாம் ஊகிக்க வேண்டும். ஆகவே ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ள நாடுகளில் ஏதாவது ஒன்று ராணுவத் தாக்குதலுக் குள்ளானால் தான் பரஸ்பர ராணுவ ஷரத்து அமலுக்கு வருமென்ற கண்டிப்பான ஷரத்தை அவர்கள் நன்கு அறிவார்கள். அட்லாண்டிக் ஒப்பந்தம் ஆக்கிரமிப்புக்கான தொரு உடன் படிக்கை யென ஐந்து நிமிடத்திற்குக் கூட தாங்கள் வாதம் செய்ய முடியாதென்பதும் அவர்களுக்கு நன்கு தெரியும்.

தங்கள் மீது தாங்களே குற்றம் சுமத்திக் கொள்ளாமல் மார்ஷல் ஸ்டாலினோ அல்லது எம். விஷின்ஸ்கியோ இவ்வொப்பந்தம் சோவியத் யூனியனுக் கெதிராக தயாரிக்கப் பட்டுள்ளதென விவாதிக்க முடியாது. ராணுவத் தாக்குதல் ஆரம்பிக்கும் ஒரு ஆக்கிரமிப்பாளனுக் கெதிராகத்தான் இவ்வொப்பந்தம் தயாரிக்கப் பட்டுள்ளது. ஆகவே மேற்கு ஐரோப்பா அல்லது அமெரிக்காமீது சோவியத் ரஷியா ராணுவத் தாக்குதல் நடத்த சாத்திய மிருக்கிறதென மார்ஷல் ஸ்டாலினும் எம். விஷின்ஸ்கியும் உண்மையில் கூற விரும்புகிறார்களா? அவ்விதமிருப்பின் அட்லாண்டிக் ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளதும் அதில் இத்தாலி சேர்ந்து கொண்டுள்ளதும் நியாயந்தானென அவர்கள் ஒப்புக் கொள்ள வேண்டும். சோவியத் யூனியனுக்கு ஆக்கிரமிப்பு நோக்கம் இல்லையெனின் அட்லாண்டிக் ஒப்பந்தத்தைக் கண்டு அஞ்ச யாதொரு விதமான காரணமுமில்லை; அத்துடன் அவ்வொப்பந்தத்தில் இத்தாலியோ அல்லது வேறு எந்தவொரு நாடோ சேர்ந்து கொள்வதை அவர்கள் எதிர்ப்பதற்கும் காரணமில்லை.

ஆயுத சுவீகரணத்திற்கு இத்தாலி அமெரிக்காவின் உதவியை கேட்டுள்ளதானது சமாதான உடன்படிக்கையின் ஆயுதபரிகரண ஷரத்திற்கு மீறின செயலாகும் என்பது தான் ரஷியாவின் இரண்டாவது குற்றச் சாட்டு, இவ்விஷயம் நான்கு ஸ்தானீகர்களும் ஒன்று கூடி விவாதித்து முடிவுக்கு வரவேண்டிய விஷயமாகும். ஆனால் இக்குற்றத்தை நான்கு ஸ்தானீகர்கள் கூட்டத்தில் ருஜூப்பிக்க முடியாதென்பது மார்ஷல் ஸ்டாலினுக்கும், எம். விஷின்ஸ்கியுக்கும் நன்கு தெரியும். இத்தாலிக்குக் கொடுக்கப் படும் எந்தவிதமான உதவியும் சமாதான உடன்படிக்கையில் கண்டுள்ள வரையறையை அதிகரிக்காதென்று அமெரிக்க சர்க்கார் காங்கிரஸுக்கு விசேஷ உறுதி மொழிகள் அளித்துள்ளதென்பதும் மாஜி எதிரி கூட்டாளி நாடுகளுக்குத் தாங்களும் எவ்விதமான உதவியும் கொடுக்க முடியாதென்பதும் அவர்களுக்கு நன்கு தெரியும்.

ஆகவே சோவியத் யூனியன் உண்மையிலேயே தீவிரமாக குற்றம் சாட்ட விரும்பி யிருந்தால் அது அமைதியாக விடுக்கப்பட்டு அமைதியா தீர்க்கப் பட்டிருக்கும். இவ்விதமான விஷயங்களைக் கவனிக்க வழக்கமான "ராஜ தந்திர வழிகள்" எப்போதும் திறந்திருக்கின்றன.

(9-ம் பக்கம் பார்க்க)

# விக்கிரமாதித்தன் சிங்காதனம்

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

கைகளின் செயல் என்பதுடன் வாக்காளர் ஜாபிதாவின் ஊழல் சொல்லித்தரமில்லை. எப்போதோ ஏதோ அடிப்படையில் தயாரிக்கப் பட்டது-பலர் இறந்துமிருக்கலாம்– இதையாவது ஒழுங்காய் வைத்து தேர்தல் நடைபெறுகிறதென்று சொல்ல முடியுமா?

வெண்குளம் பிர்க்காவில் யாரும் காங்கிரஸ் அபேக்ஷகராக முன் வராத காரணத்தால் அட்ஹாக் கமிட்டியார் தங்கள் பரிசீலனையின்போது அங்கே யாரையும் நியமிக்கமுடியாமல் டி. எஸ் அருணசலம் அவர்கள் பொறுப்பில் அந்த வேலையை ஒப்புவித்தார்கள். அவர் நியமித்த ஜெகனுதரெட்டியார் பெயர் அச்சடித்த ஜாபிதாவில் காணப்படவில்லை. நியமனப் பத்திரம் தாக்கல் செய்வதற்கு முன்பு அதிகாரிகளின் அத்தாட்க்ஷியுடன் அச்சுப் பிரதியில்லாத ஒரு அனுபந்த ஜாபிதாவில் அவர் பெயரை ஊர்ஜிதம் செய்து-பின்னர் அவர் நியமனப் பத்திரம் தாக்கல் செய்யவைத்துவிட்டார்கள். பதவியிலுள்ள கக்ஷிக்காரர்களல்லா விட்டால் சாதாரணமாக நீங்களும் நானும் இப்படி நம்முடைய பெயர் விட்டுப்போயிருந்ததை - மீட்டுக் கொண்டுவந்து-நம்முடைய வாக்குரிமையை நிலைநாட்டியிருக்க முடியுமா?- அச்சிடாத-வாக்காளர் ஜபிதாவில் அப்படி நம்முடைய பெயரை காட்டினுல்-தேர்தல் அதிகாரி அதை ஏற்றுக் கொள்ளும்படி செய்யத்தான் நமக்கு இயலுமா?-இவ்வளவு கஷ்டப் பட்டு நியமித்த காங்கிரஸ் அபேக்ஷகர் தன்னை நியமித்தவர்களைக்கூடக் கலக்காமல்-அவருடைய அனுமதியைப் பெருமல்-சுயேச்சை அபேக்ஷகரான-ஒருவருடன் சமாதானமாகப்போய்-தன் நியமனச்சீட்டை மீட்டுக் கொண்டு போய்விட்டது பற்றி நாம் இங்கே கவலைப் படவேண்டியதில்லை. சமயத்தில் போட்டு உடைத்துவிட்டார் என்பதற்காக அவர் மீது வருத்தப் படவேண்டியவர்கள் அடாக் கமிட்டியாரே யல்லாது நமக்கில்லை அந்தக் கவலை.

உதாரணத்திற்காக மட்டும் ஒன்று காட்டினேன். இவையெல்லாம் சில்லரை விஷயங்கள். ஆனுல் நமது மாகாண அரசாங்கத்தினர் சமீபத்தில் வகுத்திருக்கும் புதிய் விதி ஒன்றுதான் நம்மை வியப்பிலும் திகைப்பிலும் ஆழ்த்துகிறது. அதாவது "தேர்தல்களில் போட்டி யிட்டிருப்பவர்கள் மறுபடியும் யோசித்துத் தாங்கள் விலக விரும்பினுல் தேர்தலுக்கு ஒருவாரம் முன்புகூட அப்படிச் செய்யலாம்" என்பது தான்.

இது வரை இருந்து வந்திருக்கும் ஏற்பாடு எப்படியென்றால் நியமனப் பத்திரம் தாக்கல் செய்தவர்கள் மூன்று நாட்களுக்குள் மட்டுமே விலக்கிக் கொள்ள முடியும். இப்போது நடைபெறும் தேர்தல்களில்கூட இந்த ஏற்பாட்டின்படியே விலகிக் கொண்டவர்கள் போக மிருந்தவர்கள் தேர்தலுக்குப் போட்டியிடுவதாகக் கருதப்பட்டுத் தேர்தல் வேலைகள் நடைபெற்று வருகின்றன. அபேக்ஷகர்களுக்கு வேண்டிய பெட்ரோல் வசதியும் தரப்பட்டு, அவரவர் பிரசாரங்களைத் தொடங்கி நடத்தியும் வருகிருர்கள். இந்த நிலைமையில் புதிதாக இப்படி ஒரு விதி வகுக்கவேண்டிய அவசியம் என்னவென்பது இச்சு ஆராய்ச்சிக்கு உரியது.

முன் யோசனையில்லாமல் போட்டியிட்டவர்கள் தங்கள் பலாபலத்தைத் தெரிந்து கொண்டுவிட சிலகாலம் சந்தர்ப்பம் கிடைத்த பிறகு விலகிவிட விரும்பினுல், மிருந்திருக்கும் அபேக்ஷகருக்கு வீண் சிரமம் இல்லாமல் வெற்றிபெற வசதி செய்து கொடுத்து விடுவதற்கு உபயோகப் படலாமென்பது உண்மைதான். ஆனுல் ஒரு தடவை இதற்கான கால எல்லை கடந்து விட்ட பிறகு மறுபடியும் அதை இந்தத் தேர்தலிலேயே நீட்டி வைப்பது நேர்மையாகப் படவில்லை. கால எல்லைக்குப் பொருளில்லாமல் போகிறது!

காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்கு எங்கு பார்த்தாலும் பலத்த போட்டி யிருப்பதையும் காங்கிரஸ் வாதிகளில் சிலரே இம்மாதிரி எதிர்ப்பதையும் மனதில் வைத்துக் கொண்டு சர்க்காரின் இந்தப் புதிய விதியை சிந்தித்துப் பார்த்தால் காங்கிரஸ் அபேக்ஷகர்களின் வெற்றியைக் குறிக் கோளாகக் கொண்டே இப்படி புதிய விதியை வகுத்திருக்கிருர்களோ வென்று நினைக்க இடம் கொடுக்கும் என்பது உறுதி.

பொதுமக்களைத் தாராளமாக அணுகித் தங்களை ஆதரிக்கும்படி கேட்பதில் காங்கிரஸ் அபேக்ஷகர்களுக்குப் போதிய திறமையும் தகுதியும் இல்லை. ஓட்டுக் கேட்கப்போகுமிடத்தில் மக்கள் காங்கிரஸ் அரசாங்கத்தின் வரிக் கொள்கையைப் பற்றியும், உணவு உடைப் பஞ்சம் பற்றியும் சரமாரியாகக் கேட்கும் கேள்விகளுக்கு சுலபத்தில் பதில்கூறி அவர்களைத் திருப்தி படுத்தமுடியாத நிலையில், நயத்திலும் பயத்திலும் எதிர்ப்பு அபேக்ஷகர்களையாவது பேரம் பேசி விலகிக் கொண்டு விடும் படி செய்வதே ராஜ தந்திரமாக இருக்குமென்று நம்பி அதற்கு வசதியாக இருக்கும் பொருட்டே இந்தப் புதிய விதி வகுக்கப் பட்டிருக்கலாமென்று யாராவது யூகித்தால் அதைத் தவறு என்று எடுத்துக் காட்ட நம்மிடம் என்ன இருக்கிறது.

முன்யோசனை இல்லாமல் போட்டியிட்ட வர்களுக்கும் பொதுமக்களுக்கும் வெற்றி பெற விரும்பும் அபேக்ஷகர்களுக்கும் இந்த ஏற்பாடு சௌகரியம் செய்து கொடுக்கிறது என்று காரணம் கூறுவதாயிருக்கலாம் அப்படியானுல் நியமனப் பத்திரம் தாக்கல் செய்வதற்கு உரியகாலத்தில் ஏமாந்து போனவர்கள் விரும்பினுல் தேர்தலுக்கு ஒருவாரம் முன்பு கூட நியமனச்சீட்டு தாக்கல் செய்ய இடம் கொடுப்பார்களோ என்று ஒரு நண்பர் வினவுகிருர். விஷயம் தெரியாத பேர்வழி, பாவம்!

இந்தத் தேர்தல்களில் காங்கிரஸ் அபேக்ஷகர்கள் பெருவாரியாக வெற்றி பெறுவதில் மாகாண மந்திரிகளுக்கு சிரத்தை இருப்பது இயற்கைதான். ஏனெனில் காங்கிரஸ் அபேக்ஷகர்கள வெற்றிபெற்று ஜில்லா போர்டுகளைக் கைப்பற்ருவிட்டால் மாகாண நிர்வாகம் புரியும் தோழர்களுக்கு அது பெரும் தோல்வியாகவே மேலிடத்தாராலும் மக்களாலும் கருதப்படும் அபாயம் இருக்கிறது.

விலக விரும்பும் அபேக்ஷகர், வெற்றி வேண்டும் அபேக்ஷகரிடம் தனக்குறிய நஷ்ட ஈட்டை மறைமுகமாகக் காதும் காதும் வைத்தாற் போல் வாங்கிக் கொண்டு விலகிவிடவே இந்தப் புதியவிதி இடம்தரும். ஆனுல் தேர்தலுக்காக வீணுன பெட்ரோலும் அச்சிட்டு வினியோகித்த துண்டுப் பிரசுரங்களும், எல்லாம் பொது நஷ்டம் என்பதை மறுக்க முடியாது.

அனுவசியமாக இந்தத் தேர்தல்களை ஆரம்பித்தே இருக்க வேண்டாம். காங்கிரஸ் காரர்களை ஆங்காங்கே ஜில்லா போர்டு மெம்பர்களாக நியமனமே செய்து விட்டு மந்திரிகள் தங்கள் நிர்வாகத்தை நடத்திக் கொண்டு போயிருக்கலாம். பாழாய்ப்போன இந்த "ஜனநாயகம்" வந்து உயிரை வாங்குகிறது. அவர்கள் என்ன செய்வார்கள் பாவம்!

தேர்தல்கள் அவர்களுக்குப் பொழுது போக்கும் சிறிய கதை. வாக்காளர்களுக்கு அவை உயிரின் வாதை அரசியல் தத்துவமே இதுதான். பதவியின் மகிமை அது!

## விடுதலை பெற்றும் வெளியார் ஆதிக்கம் ?

(3-ம் பக்கத் தொடர்ச்சி)

முதலில் விவசாயத்தை எடுத்துக் கொள்வோம். புதிய அணைக்கட்டுகள், நீர்ப்பாசன வசதிகள், விஞ்ஞான முறையில் புதிய முயற்சிகள், புதிய யந்திரங்கள் இவை வேண்டும். அதே போல் வாணிபத்திலும் பல சாமான்களை நாம் இங்கே இறக்குமதி செய்து அதற்குச் சமமாகவாவது ஏற்றுமதி செய்யவேண்டியிருக்கிறது. தொழில் வளர்ச்சியில் புதிய யந்திரங்களை நாமே தயாரிக்க வேண்டியிருக்கிறது. அவற்றிற்கான மூலயந்திரங்களை வெளியிலிருந்து பெற்றாகவேண்டும். பொருளாதாரத் துறையில் நாணயமாற்று வசதிகளுடன், உலகச் சந்தையில் செலவாணியும் அதன் மீது நமக்கு ஆட்சியும் இருக்கவேண்டும். அரசியலில் உலக விஷயங்களில் நமது கருத்துக்கு மதிப்பும் செல்வாக்கும் வேண்டும். கலைகளில் கல்வியில் ஏனைய நாட்டினருக்கும் நாம் கற்பிக்கத்தக்க வளர்ச்சி தேவை. இப்படி வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் நமக்கு வெளியாருடன் ஏற்படும் தொடர்பு உள் நாட்டில் நமது வளர்ச்சிக்கு உதவுவதாக இருந்துதீரவேண்டும்.

இன்றைய நிலையில் நமக்கு அத்தகைய உறவு கிடைத்திருக்கிறதா, கிடைக்காவிட்டால் அதை நாம் பெறும் வழியென்ன என்பதுபற்றிதான் கவலையுடன் கவனிக்கவேண்டும்.

சமீபத்தில், இந்திய இஞ்சினீயர்கள் ஸ்தாபனத்தின் கூட்டம் ஒன்று 5—8—49ல் டில்லியில் நடை பெற்றிருக்கிறது. கோவையிலிருந்து பேராசிரியர் ஏ. விஸ்வநாத் என்ற பிரபல இஞ்சினீயர் அந்தக் கூட்டத்தில் கலந்துகொண்டிருக்கிறார். "ஆர்தர்ஹோப் காலேஜ் ஆப் டேக்னலஜி" என்ற கலலூரியின் தலைவா, அந்தக் கல்லூரி, யந்திர விஞ்ஞானம், மின்சார விஞ்ஞானம் ஆகிய துறைகளில் திறமை வாய்ந்த மாணவர்களைத் தயாரிக்கும் ஸ்தாபனம். சுமார் இரண்டரை லக்ஷ ரூபாயையும் இனமாகக் கட்டிடவசதியும் கோவை தொழில் மன்னர் ஜி. டி. நாயுடு அவர்களால் வழங்கப்பட்டு தோன்றிய கல்லூரி அது.

பேராசிரியர் விஸ்வநாத் மேலே கூறிய கூட்டத்தில் அரிய உண்மைகள் பலவற்றை விளக்கிக் காட்டியிருக்கிறார். அவருடைய சொற்பெருக்கில் காணப்படும் கருத்துக்கள் பொதுமக்களும் அரசாங்கமும் சிந்திக்க வேண்டியவை. இன்னும் நமது அரசியல் நடைமுறையில், சமூக வாழ்வில், தொழிலில், விவசாயத்தில், இப்படி எல்லாத் துறைகளிலும் வெளியாரின் பிடிப்பு எப்படி வேரூன்றி யிருக்கிறதென்பதை விளக்கிக் காட்டுவதாக இருக்கிறது. அவற்றை அடிப்படையாக வைத்தே இங்கு சில உதாரணங்களைப் பார்ப்போம்.

### வெளியாரின் மூலதனம்.

இப்போது ஜினிவாவில் நடைபெறும் ஐக்ய நாடுகள் ஸ்தாபனத்தின் மகாநாட்டில் கலந்து கொண்டிருக்கும், நமது பிரஞ்சு நாட்டு தூதர் சர். ராகவன் பிள்ளை நமது நாட்டில் வெளியாரின் மூலதனம் நுழைவது பற்றிய முடிவுகளைத் தெளிவு படுத்தியிருக்கிறார்.

இங்கிலாந்து அமெரிக்கா போன்ற ஒரு சில பலம்பொருந்திய நாடுகளை தவிர ஏனைய கீழ்த்திசை நாடுகள் எல்லாம் வாணிபத்தில் பிற்போக்கான நாடுகள் என்ற நிலையில் வைத்து ஐ. நா. சபை பரிசீலனை செய்கிறது. பிற்போக்கான வளர்ச்சியுடைய நாடுகளுக்கு மூலதனமும் நிபுணர்கள் உதவியும் தருவதும் அவற்றின் காரணமாக அந்த நாடுகளின் வளர்ச்சியை துரிதப்படுத்துவதும் ஐக்ய நாடுகளின் லட்சியமென்று கூறப்படுகிறது. இந்தஅடிப்படையில் அமெரிக்க ஐக்ய நாடுகளின் லட்சியமென்று கூறப்படுகிறது. இந்த அடிப்படையில் அமெரிக்க ஐக்ய நாட்டு வணிகர்கள் இந்தியா போன்ற நாடுகளில் மூலதனம் போட்டுத் தொழில்கள் நடத்த அனுமதிக்கப்படலாம் என்று சர் ராகவன் பிள்ளை விளக்குகிறார்.

இந்தத்திட்டத்தின் இரண்டு அடிப்படையான நோக்கங்களை அவர் விளக்கும்போது பின் வருமாறு கூறுகிறார்.

1. வெளிநாட்டு நிபுணர்களை, பிற்போக்கான நாடுகளின் அபிவிருத்தி திட்டங்களுக்கு ஆலோசனை கூறும்படி இரவலாக அனுப்பி உதவுவது.

2. அந்த நாடுகளில் ஐக்ய அமெரிக்கா போன்ற நாடுகளின் அரசாங்கங்களும், தனிப்பட்ட வணிகர்களும் தாராளமாக மூலதனம்போட்டு தொழில்கள் நடத்துவது. ஐ. நா. போன்ற சர்வதேச ஸ்தாபனங்களும் இப்படி மூலதனம் போடக்கூடும். இப்படி மூலதனங்களுக்கும் அவற்றின் லாபங்களுக்கும் வட்டிகளுக்கும் அந்தந்த நாடுகள் உத்திரவாதம் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கின்றன.

(தொடரும்)




ஜுபிடர் பிக்சர்ஸுக்காக ராம்நாத் சேகர் தயாரித்துள்ள "கன்னியின் காதலி" இம்மாதம் 6ந் தேதி தமிழ்நாட்டின் பல பிரதான நகரங்களில் திரையிடப்படுகிறது. அதில் நடிக்கும் அஞ்சலிதேவியின் ஒரு அழகிய தோற்றம்.

## ரஷ்யாவின் நோக்கங்கள் என்ன ?

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

சுமுகமாக விவாதித்து முடிவுக்கு வரும் சாத்தியமுமிருக்கிறது; இது உடன்படிக்கையிலும் கண்டிருக்கிறது. ஆனால் மாஸ்கோ இவைகளுக்கு மாறாக பஹிரங்கமாக மிதமான வார்த்தைகளால குற்றம் சாட்டும் முறையை கையாண்டிருக்கிறது. சோவியத் யூனியனின் குற்றச் சாட்டுகள் சம்பந்தப் பட்ட அரசாங்கங்களின் கைக்கு கிடைப்பதற்கு முன்பே வானொலியில் ஒலிபரப்பப் பட்டது.

"நான்கு வல்லரசு ஒத்துழைப்பு" என்பதை ரஷியா தள்ளுபடி செய்ததேன்? பாரிஸ் மகாநாடு முடிவடைந்த ஒரு மாதத்திற்குள் சோவியத் யூனியன் மீண்டும் இப் புதிய ராஜ தந்திர தாக்குதலை ஆரம்பித்துள்ளதேன் ?

இவைகளிலிருந்து கிரம்ளினுக்குள் ஒன்றுக் கொன்று முரணான இரு குரல்கள் இருந்து வருகின்றன என்ற முடிவுக்குத்தான் நாம் வர வேண்டியிருக்கிறது. "கத்தியில்லாப்போரில்" தற்காலிக உடன் பாட்டுக்கு வரவேண்டுமென விரும்புகின்றனர் ஒரு சாரார்; தாக்குதலை மீண்டும் ஆரம்பிக்க வேண்டுமென்று விரும்புகின்றனர் மற்றொரு சாரார். இந்த இரண்டாவது சாரார் தான் பாரிஸ் ஒப்பந்தத்தை வேலை செய்யாதபடி தடுக்க பெர்லினில் முயற்சி செய்து வருகின்றனர்.

—டபிள்யூ. என். ஈவர்

## கோர்ட் விளம்பரம்

நோட்டீஸ்

**துறையூர் டி. மு. கோர்ட்டில்**

O. P. No. 27/49.

மனுதார்: நல்லம்மாள்

எதிர் மனுதார்: செல்ல பிள்ளை உடையார்.

பெ. தா. வேப்பந்தட்டையில் மனுதார் புருஷன் சுப்புடையார் இறந்துபோய் விட்டாரென்றும் ஷியார்க்கு வரவேண்டிய லேவாதேவியை வசூல் செய்யும் பொருட்டு மனுதாருக்கு வார்சு சர்ட்டிபிகேட் கிடைக்க மனுதார் மனுக்கொடுத்து அது 5-9-49-ல் வாயுதா ஏற்பட்டிருக்கிறது. அன்றய தினம் ஆக்ஷேபணை உள்ளவர்கள் ஷை கோர்ட்டு முன்பாக ஆஜராகி தங்களுக்குள்ள ஆக்ஷேபணை தெரிவித்துக் கொள்ளாவிடில் ஒருதலை பக்ஷமாக தீர்மானிக்கப் படுமென்பதை அறியவும்.

M. R. Rajagopal
Pleader for Petitioners
Turaiur 4-8-49.

---

நோட்டீஸ்

**துறையூர் டி. மு. கோர்ட்டில்**

O. P. No. 25/49.

மனுதார்:— அங்கம்மாள்

எதிர் மனுதார்கள்:—

1. ஆண்டி செட்டியார்
2. உபாதியம்மாள்.

மு. தா. தாத்தயங்கார் பேட்டையில் மனுதார் புருஷன் சங்கஞ் செட்டியார் இறந்துபோய் விட்டாரென்றும் ஷியார்க்கு வரவேண்டிய லேவாதேவியை வசூல் செய்யும் பொருட்டு மனுதார்க்கு வார்சு சர்டிபிகேட் கிடைக்க மனுதார் மனுக்கொடுத்து அது 29–8–1949-ல் வாயுதா ஏற்பட்டிருக்கிறது. அன்றைய தினம் ஆக்ஷேபணை உள்ளவர்கள் ஷை கோர்ட்டு முன்பாக ஆஜராகி தங்களுக்குள்ள ஆக்ஷேபணை தெரிவித்துக்கொள்ளாவிடில் ஒருதலை பக்ஷமாக தீர்மானிக்கப்படுமென்பதை அறியவும்.

Turaiyur 29-7-1949. } M. R. Rajagopal மனுதார் வக்கில்.

---

**அரியலூர் டி. மு. கோர்ட்டு**

S. C. 376/49

1. ராஜா முதலியார்—வாதி

1. மாணிக்க முதலி
2. பழனியாண்டி முதலி

—பிரதிவாதிகள்.

வாதியால் பிரதிவாதிகள் பேரில் புரோ நோட்டுபடி ரூ. 51–0–0 ம். வாக்குபடி ரூ. 30–0–0 ம் ஆக ரூ. 81–0–0 கிடைக்க தாவா செயது வாய்தா 11–8–49 ஆகஸ்ட்-மீ 11-உ போட்டிருக்கிறது. ஆக்ஷேபணையிருந்தால் ஷை தினம் ஷை கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளவும்.

வாதி வக்கில்
M. V. Samina ha Aiyer,
Ariyalur.

---

# தென்னாப்பிரிகா இந்தியர்களின்

## ஆதி சரித்திரமும், இன்றைய நிலையும்.

(நமது தென்னாப்பிரிகா நிருபர் எழுதியது)

நெட்டாலில் குடியேறியிருந்த "போரஸ்" (Boers) எனப்படும் டச்சு வெள்ளையர்கள், நெட்டாலில் வடபாகத்தில் ஒன்று சேர்ந்து சென்று வாழத் தலைப்பட்டவுடன், 1843 ஆம் ஆண்டில் நெட்டால் மாகாணத்தைப் பிரிட்டிஷ் ஆதிக்கத்தில் சேர்த்துக் கொண்டார்கள்.

அச்சமயம் குயின் விக்டோரியா ஆட்சியின் சாரபில் கேப் கோலனி (Cape Colony)க்குக் கவர்னராயிருந்தவர், "நெட்டாலில் வாழும் மக்கள் யாராய் இருந்தாலுஞ் சரி, நிற வித்தியாசமும் பாஷை வித்யாசமும் பாராட்டப்படாதென்றும் எல்லோருக்கும் பாரபட்சமின்றி ஒரே பொது சட்டத்தின் கண்காணிப்பில் பாதுகாக்கப் படுவார்களென்றும்" அறிவித்திருக்கிறார்.

நெட்டாலில் வாழ்ந்திருந்த பிரிட்டிஷ் மக்கள் 1847-ஆம வருடத்தில் முதல் முதலாக கருமபுப் பயிரை ஆரம்பித்தார்கள். கரும்புத் தோட்டங்களைப் பெருக்கச் செய்ய முடியாமலும், நெட்டால் தேசத்தைப் பண்படுத்த முடியாமலும் இரங்கியபோது, சரசமான கூலி ஆட்கள் கிடைத்தாலன்றி விருத்திக் காண முடியாதென்றும் தீர்மானித்து விட்டார்கள். இவ்வூர் சுதேசியர்களைக் கரும்புத் தோட்டங்களில் வேலைக்கு அமர்த்தியும் பலன் ஏற்படவில்லை. பிறகு சீனு மலாயா தேசத்தவர்களை வேலைக்கு அமர்த்தினார்கள். அவர்களாலும பலன் ஏற்படாது போக இந்தியர்களை விரும்பினார்கள்.

1855-ஆம் வருடம் நெட்டால் கரும்புத் தோட்டங்களும், டாபன் கார்பரேஷன் கவுன்சிலர்களும இந்தியர்களை வேலைக்குக் கொண்டு வருமாறு "கேப்கோலனி (Cape Colony) கவர்னரை மிகவும் வற்புறுத்தினார்கள். ஆரம்பத்தில் இந்தியர்களை நெட்டாலுக்கு அனுப்ப முடியாதென்றும் இந்திய கவர்மெண்டார் கேப் கோலனி கவர்னருக்குக் கண்டிப்பாக அறிவித்து விட்டார்கள். நெட்டால் வெள்ளையர்கள் இந்தியா கவர்மெண்டாரையும் பிரிட்டிஷ் கவர்மெண்டாரையும் மிகவும வற்புறுத்திக் கொண்டு வந்ததால், இந்திய கவர்மெண்டார் இசைந்து, 1860-ஆம் வருடத்தில் ஆரம்பமாக நெட்டாலுக்கு வேலைக்கு வந்தனர். முதல் மூன்று வருட உடன்படிக்கை செய்து கொண்டனர். பிறகு ஐந்து வருடமாக மாற்றப்பட்டது. உடன்படிக்கையைப் பூர்த்தி செய்தவர்கள் கப்பல் செலவின்றி இந்தியாவுக்கு மீண்டும் திருமபவிடலாமென்று தீர்மானமாகியது.

நெட்டாலுக்கு இந்தியர்களுடைய வரவைக் குதூகலமாக வரவேற்ற வெள்ளையர்கள், இந்தியர்களை அடிமைகளாக நடத்தி பல விதத்திலும் இம்சித்தார்கள். 1866-ஆம் வருடம் இந்திய கவர்மெண்டார் வருத்தத்துடன் இந்தியர்களை அனுப்ப மறுத்து விட்டனர். கரும்புத் தோட்டங்களுக்கும் பெரும் நஷ்டங்கள் ஏற்படவே, அதை நிவர்த்திக்க இந்திய வேலையாட்கள் அவசியம் தேவையாயிற்று. வெள்ளையர்கள் இந்திய கவர்மெண்டாருடன் பெரும முயற்சி செய்தனர். நெட்டாலில் அப்போது கோலோனியல் காரியதரிசியாயிருந்த லார்டு சாலிஸ்பரி என்பவர், இந்திய கவர்மெண்டாருடன் புதிய ஏற்பாடுகளைச் செய்து கொண்டதால் 1874-ஆம் வருடம் முதல் மீண்டும் இந்திய வேலையாட்கள் நெட்டாலுக்கு வரத் தொடங்கினார்கள்.

இப்புதிய ஏற்பாட்டில் குடியேறிய இந்தியர்கள் தங்களது உடன்படிக்கையை பூர்த்தி செய்த பிறகு, இதர வெள்ளையர்களைப்போல் பூரண சுதந்திரத்தை அடைவார்களென்று தீர்மானித்ததோடு, 1870-ஆம் வருடத்தில் ஏற்படுத்திய சட்டத்தில் "இந்தியாவுக்கு மீண்டும் செல்ல விரும்பாதவர்களின் இலவசக் கப்பல் செலவுத் தொகைக்கீடாக, கவர்மெண்டார் நிலத்தை அளிப்பார்களென்றும்" உறுதிப் பாடாயிற்று.

நெட்டாலில் வாழும் இந்தியர்களிடம் வாணிபஞ்செய்ய, இந்திய வர்த்தகர்கள் இந்தியாவிலிருந்தும, "மோரிஷஸிலிருந்தும் சுவாதீன இந்தியர்களாக (Free Indians) அனேகர் நெட்டாலில் குடியேறத் தலைப்பட்டனர். இவர்கள் ஆரம்பத்தில் இந்தியர்களிடமும், பிறகு சுதேசியர்களிடமும, அதன் பிறகு வெள்ளையர்களிடமும் வியாபாரம செய்யத் தலைப்பட்டுவிட்டனர். இதைப்போலவே இந்திய வர்த்தகர்கள் ஈஸ்ட் ஆப்ரிக்காவிலும் குடியேறி வாணிபஞ் செய்து வந்தனர்.

இந்த ஈஸ்ட் ஆப்ரிக்கா இந்தியர்களைக் குறித்து உயின்ட்சன் சர்சல் சொன்னதாவது:—

'வெள்ளையர்கள் பிரவேசிக்க விரும்பாத இடங்களிலெல்லாம் இந்திய வர்த்தகர்கள் பரவி வாணிபத்தை ஸ்தாபித்ததினால், தேசத்தின் விருத்திக்கு பெரிதும் ஏதுவாயிற்று. வெள்ளையர்களைப்போல இந்தியர்களும பூர்வீகக் குடிகளாவர். ஆதலினால் இவ்விந்தியர்களைக் குடியேறிய நாடுகளிலிருந்து விலக்குவது இயலாத காரியமாகும்', உயின்ட்சன் சர்சல் கூறிய இவ்வார்த்தைகளை நெட்டாலில் குடியேறிய இந்திய வர்த்தகர்களுக்கும் ஒப்பிடலாம்.

நிபந்தனைக் காலத்தை பூர்த்தி செய்த இந்தியர்கள் சுவாதீனமாக சிறு தோட்டங்களிலும் வியாபாரங்களிலும் ஈடுபட்டு, நாட்டைச் செழிக்கச் செய்து விளைவுப் பொருள்களை வெகு சரஸமாக வழங்கத் தொடங்கினர். நிபந்தனையின் மேல் அடிமைகளாக ஊழியம் புரியவந்த இவ்விந்தியர்கள், இவ்வளவு கருத்துடையவர்களாக வியாபாரங்களிலும் பயிர்த் தொழில்களிலும ஈடுபட்டு முன்னேறுவதைக் கண்டு வெள்ளையர்கள் திகைத்துப் போய் பொறாமை கொள்ளத் தலைப்பட்டனர். 1880-ஆம் வருடமுதல் நிபந்தனையின் மேலும் சுவாதீனமாகவும இந்தியர்கள் இவ்வூரில் குடி புகுவதை வெள்ளையர்கள் தடைசெய்ய ஆரம்பித்தனர். (தொடரும்)

# காந்தீய மார்க்கத்தைக் கடைப்பிடிக்கும் தலைவர்

சமீபத்தில் இந்தியாவுக்கு வந்து பிரசங்கங்கள் நிகழ்த்துவதற்காகச் சுற்றுப் பிரயாணம் செய்யவிருக்கும் ஸ்ரீ பீட்டர் கோய்னுங்கே தமது மக்களின் மேம்பாட்டுக்காகத் தன்னலம் பேணுது ஆழ்ந்த ஆர்வத்துடனும், கொண்ட நோக்கத்தில் பிடி தளராத திடசித்தத்துடனும் உழைக்கும் அரும் தீரருக்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறார்; கிழக்காப்ரிக்காவின் சரித்திரத்திலேயே இவருக்கு இணையாக வேறு எவரையும் குறிப்பிடுவது அரிது. 1904-ல் பிறந்து அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் கல்வி பயின்றிருக்கும் ஸ்ரீ கோய்னுங்கே தலைசிறந்த அறிவாளிகளையும் சிந்தனையாளர்களையும் சந்தித்திருக்கிறார். அவர் 1927 முதல் 1936 வரையில் வர்ஜீனியாவில் இருந்திருக்கிறார். 1936 முதல் 1937 வரையில் அவர் செய்ன்ட் ஜான் கல்லூரியில் கல்வி - விவசாயத் துறையில் பட்ட பிற்காலப் படிப்பில் ஈடுபட்டிருந்தார்; 1937-1938-ல் அவர் லண்டன் கல்வித் துறைக் கழகத்தில் மாணவராக இருந்தார்; அங்கிருக்கும் போது அவர் பொருளாதாரத் துறையில் பேரறிஞரான ஹெரால்ட் லாஸ்கியின் தொடர்பைப் பெறும் பாக்கியம் பெற்றிருந்தார்.

பீட்டர் கோய்னுங்கே தமது கல்வி முடிந்து திரும்பியதும் புகழ் திகழும் பல வெகுமானங்கள் அவர்கைக்கு எட்டக் கூடியதாகத்தான் இருந்தன; ஆனால் அவர் அவைகளை மதிக்கும் மணப்பன்புள்ளவராக அமையவில்லை; தமது மக்களின் பிற்போக்கான நிலையையும், அவர்களுக்கு ஒரு அருந் தலைவர் அவசரமாகத் தேவை என்பதையும் உணர்ந்த அவர் கிதுங்ரி என்னுமிடத்தில் புதிய தாமஸ் கெனியா ஆசிரியர் கல்லூரியை ஏற்படுத்தி 1938 முதல் 1947 வரையில் அதில் போதித்துவந்தார்.

ஏராளமாக நிலபுலன் படைத்திருந்த ஊர்த்தலைவர் குடும்பத்தில் பிறந்தவர்தான் பீட்டர். அவரது குடும்பம் அதன் நிலபுலன்கள் அனைத்தையும் முதலாவது உலக யுத்தத்துக்குச் சில வருஷங்களுக்கு முன் இழந்துவிட்டார்; 1905-ல் மூதாதைகள் ஊரைவிட்டு அக்குடும்பத்தினர் கிளம்பி வெளியேறி விட்டனர். இப்போது 80 வயதடைந்துவிட்ட அவர் தந்தை 43 வருஷ காலம் ஊர்த் தலைவராக இருந்திருக்கிறார். பொறுமையையும் சிக்கனத்தையும் கடைபிடித்து அவர் மேலும் மேலும் நிலபுலன்களைத் தேடிச் சேர்த்து வந்திருக்கிறார்; இன்று ஆப்ரிக்கர் சமுதாயத்தில் உள்ள பெரிய நிலச்சுவான்தாரரில் அவர் ஒருவர் என்று கருதப் படுகிறது. அவரோடு பழகும் சந்தர்ப்பம் வாய்த்தவர்கள் அவருக்குள்ள இளமைத் துடிப்பையும் தமது குழந்தைகளுக்குக் கல்வி கற்பதற்காக அவர் செய்து வரும் அரும் பிரயத்தனங்களையும் விசேஷமாகக் கவனிக்க நேர்ந்திருக்கிறது. நில புலன்களைப் பெருக்குவதுடனும், மக்களுக்குக் கல்வி கற்பிப்பதுடன் அவரது முயற்சிகள் முடிந்து போய்விடவில்லை. ஆப்ரிக்க சமுதாயம் முழுவதையும் தழுவிய ரீதியில் அவரது நடவடிக்கைகள் அமைந்திருந்தன. கிழக்காப்ரிக்காவிலுள்ள கெனியா, யுகாந்தா, டாங்கனிகா ஆகிய மூன்று பிரதேசங்களும் ஐக்கியமாக இணைவதை எதிர்த்து அவர் 1931-ல் ஆப்ரிக்கா தூது கோஷ்டி ஒன்றை பிரிட்டனுக்கு அழைத்துச் சென்றார். தமது குடியினர் அல்லது வகுப்பினருக்கு இந்த ஐக்கியத்தால் பாதகம் ஏற்படும் என்பதற்காக அவர் இம்முயற்சியில் ஈடுபடவில்லை. யுகாந்தாவிலும் டாங்கனிகாவிலும் உள்ள தமது ஆப்ரிக்க சகோதரர்கள் கெயுயா நிர்வாகத்தைப் போன்ற ஆட்சியின் கீழ் வந்துவிடக் கூடாது என்ற கருத்தில்தான் அவர் அதை மேற் கொண்டார். கெனியாவில் தங்கள் சொந்தத் தாயகத்தில் உள்ள நிலங்களுக்கும் கனிச்சுரங்கங்களுக்கும் செல்வத் தடை விதிக்கப் பட்டிருக்கும் நிலையில் உள்ள ஆப்ரிக்கரைவிட யுகாந்தாவிலும் டாங்கனிகாவிலும் உள்ளவர்கள் சந்தோஷமாக வாழுகிறார்கள் என்று அவர் கருதினார். இத்தகைய சிறப்புவாய்ந்த ஒரு தந்தைக்கு மகனாகப்பிறந்த பீட்டர் அரசாங்க உத்தியோகங்களையும் செல்வம் திரளுவதற்கேற்ற இதர வழிகளையும் துச்சமாகக் கருதி புறக்கணித்துவிட்டு, தமது மக்களின் கல்வியிலேயே கவனம் செலுத்தினார் என்பது வியப்பல்ல. கெனியா ஆசிரியர் கல்லூரி ஆப்ரிக்கரின் தேசிய நிலையம் என்று கூறக் கூடிய ஒரு நிலைக்கு வளர்ச்சியடைந்து விட்டது. அரசாங்கத்தாரின் விதிகளுக்கும் நியதிகளுக்கும் கட்டுப்பட்டு நடக்க விருப்பமில்லாதபடியால், அரசாங்கத்தாரிடமிருந்து சகாயத்தொகை மானியம் எதையும் அது பெறுவதில்லை. இது வரையில் அது 415 ஆசிரியர்களைப் பயில்வித்து அனுப்பியிருக்கிறது; இவர்கள் கெனியாவிலுள்ள 20,000 மாணவர்களிடையே கல்வி புகட்டி வருவதாக மதிப்பிடப் பட்டிருக்கிறது. இந்திய சமுதாயம் இதனுடன் தனக்கும் தொடர்பு உண்டு என்று பெருமை பாராட்டக் கூடிய பல நிலையங்களில் இதுவும் ஒன்றாகும்; இந் நிலையத்துக்கு இங்குள்ள இந்தியர்கள் கணிசமான அளவில் ஆதரவளித்து வந்திருக்கின்றனர்.

பீட்டர் கோய்னுங்கே தமது தந்தையால் தமக்குப் பரிசளிக்கப் பட்டிருக்கும் 150 ஏகரா நிலப் பரப்புள்ள பண்ணையில் இப்போது வாழ்ந்து வருகிறார். நவீன ஆப்ரிக்கர்கள் என்று சொல்லப்படுகிறவர்கள் விரும்பி மேற்கொள்ளும் புதிய வாழ்க்கை முறையைப் புல்லியதாகக் கருதிப் புறக்கணித்துவிட்டு அவரும் இதர ஆப்ரிக்கர் எல்லாரையும் போலவே சாதாரண வாழ்க்கை நடத்தி வருகிறார். தம்மக்கள் தன்னையும் தங்களில் ஒருவனாகக் கருதித் தாராளமாகப் பழக வேண்டும் என்றும், தமது அறிவுரையைச் சிறிதும் தயக்கமின்றி ஏற்றுக் கொள்ள வேண்டும் என்றும் விரும்பி நடக்கிற பீட்டரிடம் பேசும்போது காந்திய தத்துவம் எதிரொலிப்பதை உணர்ந்து வியப்புற நேரிடும்.

அவரது வாழ்க்கை வேலை எதுவுமில்லாத வீண் விளையாட்டாகக் கழியவில்லை. பல வருஷங்களுக்கு முன் அவர் நய்ரோபி நகரில் உள்ள பங்களா, வீடுகளில் தமது முதுகிற் சுமந்து சென்ற காய் கறிகளையும் பூக்களையும் விற்பனை செய்து வந்திருக்கிறார். அமெரிக்காவிலும் அவர் பள்ளிக் கூடங்களிலும் 'இதர நிலையங்களிலும் என்னென்ன குற்றேவல்களைச் செய்யமுடியுமோ அவைகளைச் செய்துதான் கல்வியில் மேல் நிலையை அடைந்தார்.

ஆப்ரிக்கர்களும், கிழக்காப்ரிக்காவிலுள்ள ஆப்ரிக்கரின் எதிர்கால நலத்தில் அக்கரை கொண்டுள்ள எல்லோரும், இன்னும் முனுக்கவிழாத நிலையிலும், தமதுமக்கள் பரிந்து சொரியும் அன்பு காரணமாகவும் பாராட்டுதல் காரணமாகவும் நிதானங் கெட்டுவிடாத நிலையிலும் இருக்கும் பீட்டர் கோய்னுங்கே எவ்வளவோ அரிய காரியங்களைச் சாதித்து முடிப்பர் என்று எதிர்பார்க்கிறார்கள்; அவர் மேல்நாடுகளை அதிகமாக அறிந்திருக்கிறார்; எனினும் தமது மக்களின் உய்வுக்கு உழைப்பதில் தமக்கு வழிகாட்டுவதற்கு அவர் கீழ்த்திசை மார்க்கத்திலேயே, முக்கியமாக மகாத்மா காந்தியின் போதனைகளிலேயே, உள்ளஞ் செலுத்தி வருகிறார். இது விஷயத்தில், இந்தியாவுக்கு அவர் விஜயம்செய்வது ஒரு புண்ணிய யாத்திரை போன்றதாகும். இந்தியப் பிரதம மந்திரியால் அவருக்கு அபார மரியாதையும் பற்றுதலும் உண்டு. இந்தியா தனது சுதந்திரத்தைத் தேடிக் கொண்ட விதமும் இப்போது தனது செல்வாக்கை சர்வதேச அரங்கத்தில் பயன்படுத்தி வரும் விதமும் அவரது மனதைக் கவர்ந்து விட்டிருக்கின்றன. மேனாட்டுக் கல்வியும் கீழ்த்திசை மண்டல உளப்பண்பும் ஒருங்கிசைந்து பரிணமித்துள்ள ஆப்ரிக்க அறிஞர் ஒருவரின் சிந்தனை சொரூபத்தை இந்திய மக்கள் அவரிடம் காண்பார்கள்.

Regd. No. 3398 SHIVAJI 7—8—49 Estd. 1935

## அமெரிக்கா சென்று......



பாஞ்சாலப் பல்கலைக் கழகப் பட்டதாரியான லாகூர் இளைஞர் டாக்டர் ஜோஷி, நார்தாம்டன் ஸ்மித் கல்லூரியில் முற்போக்குக் கல்விக்கான பட்டம் பெறப் பயிலும் **59** மாணவர்களில் ஒருவர். அங்கு இந்த ஆண்டு பி. ஏ. பட்டம் பெற்ற நானூறு மாணவர்களில் ஒருத்தியான ஸ்டுவர்ட் என்ற பெண்மணியுடன் பட்டமளிப்பு விழா வன்று மகிழ்ச்சியைப் பரிமாறிக் கொள்கிறார்.



ஆலிவ் கைலாசம் என்ற பதினைந்து வயது இள நங்கை-இந்தியச்சிறுமி, நியூயார்க் நகரத்தில் இசைப்பயிற்சிக் காகச் சென்றிருக்கிறாளாம். தன் ஆசிரியரிடம் அவள் இசைக்கருவி ஒன்றை மீட்டுகிறாள். ஆசிரியரான பெர்க்லி "எட்யூட்" என்ற இசைக்கலைப் பத்திரிகை ஒன்றின் ஆசிரியராக இருப்பவர். இந்தப் பெண்ணின் தந்தை பால்சன் கைலாசம் என்பவர் இந்திய விமானப்படையின் அதிகாரிகளில் ஒருவர்

# கோவை கண்காட்சி.

தொழில் மன்னர் ஜி. டி. நாயுடு அவர்கள் கோவையில் தனது "கோபால் பாக்" மாளிகையில் ஆரம்பித்து வைத்திருக்கும் விஞ்ஞானத் தொழில், கல்விக் கண்காட்சி மேலும் தொடர்ந்து 15—8—49 வரை நடைபெறும் என்று தெரிகிறது. சென்ற 15—8—49-ல் இதைத்திறந்து வைத்தவர், கல்கத்தாவிலிருந்து வெளிவரும் "Industry" (தொழில்) என்னும் பத்திரிகையின் ஆசிரியரான திரு. கே. என். பானர்ஜி என்பவராவார்.

* * *

இவரைப்பற்றி நாயுடு அவர்கள் ரஸமான செய்தி ஒன்றைக் குறிப்பிட்டார். ஒரு சமயம் நாயுடு தன்னுடைய திரண்ட செல்வத்தில் ஒரு பகுதியை, நீதி வழுவாத நெறிமுறையுடன் தொழிலுக்கும் கல்விக்குமே முற்றிலும் உழைக்கும் பத்திரிகைகளின் வளர்ச்சிக்காக ஒதுக்கி வைத்தார். அந்த நிதியிலிருந்து இந்தப் பத்திரிகை ஆசிரியருக்கும் ரூ. 500/- அனுப்பப்பட்டது. ஆனால் ஆசிரியர் இந்தத் தொகையைத்தானே எடுத்துக்கொண்டுவிட விரும்பாமல் நாயுடு அவர்கள் அளித்த தொகைக்குச் சமமாகத் தானும் ஒரு 500 ரூபாயைப்போட்டு அத்துடன் மேலும் நாலாயிர ரூபாய் திரட்டி மொத்தமாக ஐயாயிர ரூபாய்களை ஒரு நிதியாக ஒதுக்கி வைத்து, அதன் வட்டித் தொகையிலிருந்து ஆண்டுதோறும் தன் பத்திரிகையில் வெளியாகும் தொழில் வளர்ச்சி சம்பந்தமான சிறந்த கட்டுரையாளர்களுக்குச் சன்மானம் அளிப்பதாகக் கூறினாராம். இந்த யோசனையை நாயுடு அவர்களுக்கு அறிவித்தபோது, அவர் மகிழ்ச்சியடைந்ததுடன் அந்த நிதிக்கு உரிய பூரா தொகையும் தானே கொடுத்து விட்டாராம். இன்றைக்கும் நாயுடு அவர்களின் பெயரால் கல்கத்தாவிலிருந்து வெளிவரும் அந்தப் பத்திரிகை கட்டுரைப் போட்டியைத் தொடர்ந்து பல வருஷங்களாக நடத்தி வருகிறது.

வடக்கு, தெற்கு என்று பண்பாடுகளைப் பிரித்துப் பார்க்கும் போக்குடையவரான நாயுடு கல்கத்தாப் பத்திரிகையுடன் இவ்வளவு உறவு கொண்டிருப்பதைக் கவனித்தால், உண்மையையும் உழைப்பையும், வேறெந்த காரணத்திற்காகவும் அவர் பாராட்டத் தயங்குவதில்லை என்பது தெரிகிறதல்லவா?

* * *

கண்காட்சியில், மோட்டார் வண்டிகள், மின்சாரக் கலைப் பொருள்கள் புதுமுறை யந்திரங்கள், ரேடியோக் கருவிகள், நாயுடு அவர்கள் கண்டுபிடித்தவையும் கோர்த்தவையுமான விஞ்ஞானப் பொருள்கள் ஆகியவை நிறைந்திருக்கின்றன. பகலெல்லாம் கண்காட்சிக்கு வருகிறவர்களுக்கு, தொண்டர்கள் பொருள் அருமையையும் அவற்றின் பயனையும் விளக்கிக் கூறுவதுடன் யந்திரங்களை ஓட்டிக் காட்டுகிறார்கள். விஞ்ஞானப் பொருள்கள் பற்றி ஒன்றுமறியாதவர்களுக்குக் கூட இந்தக் காட்சி உபயோமானது. மாலையில் அறிஞர்களின் சொற்பெருக்குகள் நடைபெறுகின்றன. பின்னர் அவருடைய தியேட்டரில் கல்வி சம்பந்தமாகவும் விஞ்ஞானம், தொழில் சம்பந்தமாகவும் பல அறிய சலனப் படங்கள் காட்டப் படுவதுடன் விளக்கியும் கூறப் படுகின்றன. நீங்களும் ஒரு தடவை சென்று பாருங்கள்.

திருச்சி, 3, சின்னக்கடைத்தெரு, சிவாஜி பிரிண்டிங் ஒர்க்ஸில், ஸ்ரீ M. S. ராஜரெத்தினம் பிள்ளை அவர்களால் அச்சிடப்பட்டது. ஆசிரியர், திருலோகசீதாராம் அவர்களால் வெளியிடப்பட்டது.